# கருட புராணம்

ஆசிரியர்

**ஆர். பொன்னம்மாள்**




**கிரி**

**கிரி டிரேடிங் ஏஜென்ஸி பிரைவேட் லிமிடெட்**

Book Name : **GARUDA PURANAM**
Language : Tamil
Copyright : **GIRI TRADING AGENCY PRIVATE LIMITED**
1st Edition : May 2008
3rd Reprint : Dec. 2010
Pages : 128
Price : ₹ 50.00
ISBN No. : 978-81-7950-443-7
Book Size : Demi
Paper : Maplitho
Copies : 2000

Published by : **GIRI TRADING AGENCY PRIVATE LIMITED**
***Head. Office*** : Modi Niwas, Opp.Post Office, Matunga, Mumbai - 19. © (022) 2414 1344
***Admn. Office*** : 134 (58/2), T.S.V. Koil Street, Mylapore, Chennai - 4. © (044) 2464 3551



***Our Branches:***

**MUMBAI**

**MATUNGA** : Modi Niwas, Opp.Post Office, Matunga, Mumbai - 400 019.
© (022) 2412 2316, 2414 3140, 2417 9735, 2415 8107

**DOMBIVILI (E)** : Seva Dham "A" Wing, Shripal Nagar, Rajaji Path, 4th Cross,
Opp.: Ponnu Guruvayurappan Temple, (Madrasi Mandir), Dombivili (E),
Thane Dist. 421 201. © (0251) 244 9585

**GOREGAON (W)** : 2, Siddhi Vinayak Apts, Sita Ram Mandir Road, Bangur Nagar,
Mumbai-400 104. © (022) 2876 7298

**NERUL** : S.I.E.S. Engineering & Computer College Complex, Anjaneyar Temple,
Navi Mumbai - 400 706. © (022) 2770 7664

**CHENNAI**

**MYLAPORE** : 14 (Old 10), Kapaleeswarar Sannadhi Street-600 004. © (044) 2464 0376

**NANGANALLUR** : 14 (Old 8), 10th Street, Near Raghavendra Temple-600 061.
© (044) 2267 1335

**ALWAR THIRUNAGAR** : Shop : A, Plot No.17, Gandhi Road, (Opp.) Chinthamani Vinayagar Temple, Chennai - 600 087. © 2377 5483

**KANCHIPURAM** : 5&146-B, Kamakshi Amman Sannadhi Street-631 502.
© (044) 2722 4415

**OTHER CITIES**

**COIMBATORE** : F6, T.M.House, 92, Thiruvenkatasamy Road, R.S.Puram-641 002.
© (0422) 254 1523

**MADURAI** : 15, North Tower Street, (Opp. Mottai Gopuram)-625 001. © (0452) 262 8090

**SECUNDERABAD** : Sri Subramanya Swami Devalayam, Padmarao Nagar,
Skandagiri-500 061. © (040) 2750 3046

**BANGALORE** : 23/3, 5th Cross, Sampige Road, Malleshwaram-560 003 © (080) 2356 3001

***E-mail : sales@giri.in*** ***Website : www.giri.in***

# முன்னுரை

அன்பார்ந்த நெஞ்சங்களுக்கு,

வணக்கம். வாழ்த்துக்கள். 'காருடம் தர்சனம் புண்யம் ததோ பி த்வனி ருச்யதே' என்ற வாக்குப்படி கருடனை தரிசிப்பதும், அவரது குரலைக் கேட்பதும் நல்ல சுபசகுனம். இங்கே **கிரி டிரேடிங் ஏஜென்ஸியார்** கருட புராணத்தில் கருடன் வரலாறும், பெருமையும் கண்டிப்பாக இருக்க வேண்டும். அதைப் படித்தோ, விரும்பி படிப்பவர்களுக்கு அமாவாசை, பௌர்ணமி, ச்ரார்த்தம் போன்ற புண்ணிய தினங்களில் தானம் வழங்கியோ பக்தர்கள் க்ஷேமத்தை அடைய வேண்டும்' என்று அன்புக் கட்டளையிட்டனர். இதோ வழங்கப்பட்டிருக்கிறது.

கருடனுக்கு பிரகஸ்பதி குலதெய்வம். அதனால் கருடதரிசனம், கருட ஸ்லோகம் கன்னியருக்கு விரைவில், நல்ல இடத்தில் விவாகம் நடக்க உதவும். பெருமாளின் திருவாராதனமணியில் அதற்காக சிலர் கருடன் அமைந்ததாக வாங்குவர். அவர் வைகுண்ட நித்யஸூரி.

சுபர்ணனது கால்சட்டை அதாவது "சண்டாதகம்" சிவப்பாயிருக்கும். கஜேந்திரனை முதலை வாயிலிருந்து காத்த நாள், கருடன் பார்வை யானையின் மேல் விழுந்த நாள் அக்ஷய திருதியை.

**கருடாய நமஸ்துப்யம் ஸர்வ சர்பேந்த்ர சத்ருவே |**
**வாஹனாய மஹாவிஷ்ணோ: தார்க்ஷ்யாய அமிர்ததேஜஸே ||**

என்று போற்றியபடி கருடனை வணங்குவது விசேஷம்.

"அமுதம் எடுத்து வருகையில் வைநதேயர் வைகர்ணம் என்கிற விஷ்ணுவின் வாசஸ்தலத்தில் தன்னை விட வலிமையுள்ள பல கருடர்களைக் கண்டு சினந்தார்" என்கிறது ஈஸ்வர ஸம்ஹிதை.

"நான் நினைத்தால் பல சுபர்ணர்களை உருவாக்க முடியும். என்னை வென்றதாகப் பெருமை கொள்ளாதே! பல சமயம் நானே உனக்குள் இருந்து இயங்குகிறேன்" என்றாராம் ஸ்ரீஹரி.

கருடன் அமுத கும்பத்தை எடுத்து வருகையில் அடியில் வைக்கப் பட்டிருந்த புல்லே விஸ்வாமித்ரம் என்கிற பெண் தர்ப்பம். அமிர்தம் அதில் சிந்தியதால் அதற்கு 'அமிர்தவீர்யம்' என்ற பெயர் ஏற்பட்டது.

கருடனால் விழுங்கித் துப்பப்பட்ட வலாசுரனது எலும்புத் துண்டுகளே கருடப்பச்சை எனப்படும் மரகத ரத்தினமாகும். இதை அணிபவருக்கு அறிவுத்திறன் அதிகரிக்கும். புதனால் ஏற்பட்ட தோஷங்கள் நீங்கும். கண்ணன் துவாரகைக்கு வெளியே இருந்த போதெல்லாம் துவாரகையைக் காத்தவர் கருடன்.

மால்யவானோடு தாசரதி யுத்தம் செய்கையில் மால்யவானைத் தன் இறக்கை வீச்சால் பஞ்சுபோலாக்கியவர் கருடன் என்கிறது உத்தர ராமாயணம். தியாக பிரம்மம் கருடனை மிகச் சிறந்த கிருஷ்ண பக்தர் என்று வர்ணித்திருக்கிறார்.

நாராயண தீர்த்தரும் லீலா தரங்கிணியில் கருடனது மகிமைகளைச் சொல்லியிருக்கிறார்.

இரவில் பறவைகளுக்கு பூமி தீப்பற்றி எரிவது போல் தெரியுமாம். அதனால் இரவில் பட்சிகள் தரைக்கு இறங்கி வருவதில்லை. கருடனும் அப்படித்தான். கோபம் கொண்டால் மட்டுமே கருடன் சிறகுகளை உதறிப்பறக்கும். கருடப் பறவை சாதாரணமாக ஒன்றரை அடி உயரமிருக்கும்.

தஞ்சாவூரின் அமைப்பு கருடன் பறப்பது போல் அமைக்கப்பட்டதால் அதற்கு கருடபுரி என்ற பெயரும் உண்டு.

கிரமப்படி நடக்கும் கும்பாபிஷேக நேரத்தில் ஆகாயத்தில் கருடன் வட்டமிடும்.

வெளியூர் பயணங்கள், சுபச் செயல்கள் துவங்குகையில் கருட ஸ்லோகம் படித்தால் இடையூறு நேராது. கருடன் நிழல்பட்ட நிலங்களில் விளைச்சல் அதிகமாயிருக்கும்.

ஸ்ரீவிஷ்ணு சகஸ்ரநாமத்தில் "ஸுபர்ணோ வாயு வாஹன" என்ற ஸ்லோக வரிகள் எம்பெருமான் பெருமையோடு சேர்க்கப்பட்டிருக்கின்றது.

அமெரிக்காவின் சின்னம் கருடன். கருடனுக்கு செம்பருந்து என்றொரு பெயருண்டு. இவருடைய பிள்ளைகள் ஸ்ரீராம காரியத்துக்கு உதவிய ஜடாயு, சம்பாதியாவர். இந்தக் கழுகு இனத்தை சின்னமாகக் கொண்டதால் அமெரிக்கா நாளுக்கு நாள் வளர்ச்சியுற்றுக் கொண்டிருக்கிறது.

ஹர்ஷவர்த்தனர் நாகானந்தம் என்ற நாடக நூலில் 4,5 அங்கங்களில் நான்கு செய்யுட்களில் கருடனின் பலம், கருணை இவற்றை விளக்கியிருக்கிறார்.

கார்க்கோடகன் பெயரைச் சொன்னால் ஏழரைச்சனியினால் ஏற்படும் கஷ்டம் விலகும் என்கிறது நளசரித்திரம். அந்தக் கார்க்கோடகனை ஹாரமாக அணிந்திருப்பவர் கருடன். கருடக்கிழங்கை திருஷ்டி, விஷதோஷம் நீங்க வீட்டு வாசலில் கட்டுவது பண்டைய வழக்கம். கருடக்கிழங்கின் வால் நீண்ட பீட்ரூட்டின் வால் போல் இருக்கும்.

கருத்மான் என்ற நாமமே கருடன் என்றாயிற்று. கருத்மான் என்றால் வீரன் என்று அர்த்தம். மத்ஸ்ய புராணமும் கருடனை சிலாகித்துப் பேசுகிறது.

மௌரியர்கள் சுபர்ணனை அதிர்ஷ்ட தெய்வமாக வழிபட்டனர். சமுத்திர

குப்தன், குமார குப்தன் ஆகியோர் பொற்காசுகளில் பொக்கிஷம் வளர கருட முத்திரையிட்டனர்.

சந்திர குப்த விக்கிரமாதித்யன் முதன்முதலில் டில்லியில் நாட்டின் செழிப்புக்காக ஒரு கருடக்கம்பம் நாட்டினார். தேவகிரி யாதவர்களுக்குக் கொடியும், சின்னமும் கருடனே.

ஹோமர் எழுதிய இலியத் என்ற ரோமானிய காவியத்தில் ஒரு பெரிய பாம்பைப்பற்றியபடி கருடன் வானத்தில் வட்டமிடுவதாகக் கூறப் பட்டுள்ளது. காம்போஜத்தில் கருடனே யோக தேவதையாக இருந்தி ருக்கிறார்.

காலச்சக்கரம் சுழலும் போதே வைநதேயன் தோன்றியதாக 'மாதங்க லீலா' உரைக்கிறது.

கருடன் தகர்த்த மேருமலையின் சிகரத்துண்டே சமுத்திரத்தில் விழுந்த இலங்கைத்தீவு என்று பேசப்படுகிறது.

திருவனந்தபுரத்திலுள்ள ஸ்ரீ அனந்தபத்மநாபஸ்வாமி கோவிலிலுள்ள ஸ்ரீகருட பகவான் ஆறேழு அடி உயரத்தில் நின்ற நிலையில் நாகங்களைப் பூண்டு சேவை தருகிறார்.

"மாலாய் பிறந்த நம்பியை, மாலே செய்யும் மணாளனை ஏலாப்
பொய்களுரைப்பானை, இங்கே போதக்கண்டீரே! மேலால் பரந்த
வெயில் காப்பான் வினதை சிறுவன் சிறகென்னும்
மேலாப்பின் கீழ்வருவாளை விருந்தாவனத்தே கண்டோமே"

என்று பாடுகின்றாள் ஆண்டாள்.

பிருந்தாவனத்தில் கண்ணன் விளையாடுகையில் அவன் மீது வெயில் படாமலிருக்க, தன் சிறகைக் குடைபோல் விரித்து கிருஷ்ணனின் தலைக்கு நேராகப் பறப்பதாகக் கற்பனையில் கண்டு புளகிக்கிறாள் கோதை.

கருட பஞ்சமி (நாக பஞ்சமி) விரதம் சுமங்கலிகளால் கொண்டாடப்பட்டு வருகிறது. இதனால் சுபீட்சம் பெருகும்.

கருடனது பீஜாக்ஷரம் 'கம்'. சக்தி பீஜம் 'டம்'. கருடனுடைய பெயரிலேயே இரண்டும் இருக்கிறது. பெருமாள் சோதனை செய்து வரம் தருவார். கருடனோடு சேர்த்துத் திருமாலை ப்ரார்த்தித்தால் உடனே அமோகமான பலன்கள் கிடைக்கும் என்கிறது பரிவதிலீசனைப் பதிகம். அப்பேற்பட்ட கருடபுராணத்தை (வரலாறு) புண்ணிய தினங்களில் படிப்பது காரியத் தடைகளை அகற்றி வெற்றியைத் தரும். உங்கள் சார்பில் **கிரி டிரேடிங் ஏஜென்ஸி**யாருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். உங்கள் ஆதரவே எங்களின் மூலதனம். வாழ்த்துக்கள்.

அன்புடன்

**ஆர். பொன்னம்மாள்**

# பதிப்புரை

ஸ்ரீகருடாழ்வார், பெரியதிருவடி, பக்ஷிராஜா், மஹாவிஷ்ணுவின் வாகனம் என்றெல்லாம் பெருமைக்குரியவா் ஸ்ரீ கருடன். "ஸுபா்ணோ வாயு வாஹன" என்ற ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்லோகம் மூலம் மஹாவிஷ்ணுவுக்கு இணையாக ஸ்ரீ கருடன் பெருமை பெற்றிருப்பதை அறிய முடியும்.

ஒரு சமயம் நைமிசாரண்யம் எனும் சிறப்புமிக்க வனத்தில் தவம் மேற்கொண்டிருந்த ரிஷிகள் வேத வியாசரின் சீடரான சூதா் என்ற மகரிஷியிடம் பல ஐயங்களை எழுப்பினாா்கள். "உலகில் ஜீவராசிகளுக்கு எதனால் ஜனன, மரணங்கள் ஏற்படுகின்றன? சிலா் தீராத வியாதியால் அவதிப்படுவது ஏன்? உடலை விட்டு பிரிந்த உயிா் எதனால் சொா்க்கத்தையோ, நரகத்தையோ அடைகிறது? சிலா் ஆவியாய் அலைவது ஏன்? மோட்சம் கிடைக்க வழி என்ன?"– என்ற ஐயங்களுக்கெல்லாம் பதில் கூறியருளுமாறு அவரிடம் வேண்டிக் கொண்டனா். சூதமாமுனிவா் தமது குருவாகிய வேதவியாசரையும் பகவான் மஹாவிஷ்ணுவையும் தியானித்து வணங்கிய பின்னா் "சனகாதியரே! நீங்கள் கேட்ட கேள்விகளை முன்பொருமுறை ஸ்ரீகருட பகவான் ஸ்ரீமந்நாராயணரிடம் கேட்டாா் . அதற்கு மஹாவிஷ்ணு அளித்த விளக்கங்களை அப்படியே சொல்கிறேன்" என்று அந்த புண்ணிய புராண வரலாற்றை கூறினாா்.

**ஸ்ரீகருடனுக்கு திருமால் அளித்த அந்த விளக்கங்கள் 'கருடபுராணம்' என அழைக்கப்படுகிறது.**

வியாச மகரிஷி தொகுத்தருளிய பதினெண் புராணங்களில் ஒன்றான கருடபுராணம் மேன்மையானது. எமது கிரி நிறுவனம் புராண வெளியீட்டு வரிசையில் தற்போது கருடபுராணத்தையும் பிரசுரிப்பதில் பெருமை கொள்கிறது. ஆன்மீக நூல்களை எளிய தமிழில் எழுதி புகழ்சோ்த்திருக்கும் **திருமதி. பொன்னம்மாள்** அவா்கள் மக்கள் அனைவரும் படித்து பயன்பெறும் வகையில் ' கருடபுராணம்' என்னும் இந்நூலை அழகு தமிழில் உரைநடை வடிவில் படைத்துத் தந்திருக்கிறாா். மக்கள் நல்வாழ்வு வாழ்வதற்குரிய வழிமுறைகளை விளக்கும் கருட புராணத்தில் கருடனின் வரலாறும், மகிமையும் சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

கருடனை தரிசிப்பதும் அவா் குரலைக் கேட்பதும் சுபசகுனம். கருடனுடைய பாா்வைக்கு உள்ள சக்தி பற்றி அம்பாளின் புகழ்பாடும் ஸௌந்தா்யலஹரியில் குறிப்பிடப்பட்டுள்ளது. கருடனோடு சோ்த்து திருமாலைப் பிராா்த்தித்தால் உடனடியாக அமோகமான பலன்கள் கிடைக்கும் என்கிறது பரிவதிலீசனைப் பதிகம். திருக்கோயில் கும்பாபிஷேக நேரத்தில் வானத்தில் கருடன் வட்டமிட்டால் நாடு சுபிட்சம் பெறும் என்பது ஐதீகம். நாராயண தீா்த்தா் லீலாதரங்கிணியில் கருடனது பெருமைகளை சொல்லியிருக்கிறாா்.

ராம ராவண யுத்தத்தில் பெருமாளையும், இளைய பெருமாளையும் நாகபாசத்திலிருந்து விடுவித்தவர் ஸ்ரீ கருடன் தான்.

பாற்கடலைக் கடையும்போது திருமாலின் கட்டளைப்படி மந்தர மலையைத் தன் முதுகில் சுமந்து வந்து பாற்கடலில் வைத்தவர் கருடன்தான். கருடன் எடுத்துவந்த அமிர்த கலசத்தில் ஒட்டியிருந்த தேவலோகப் புல்லே அமுத சம்பந்தம் பெற்று 'அம்ருத வீர்யம்' என்ற பெயருடன் பூலோகத்தில் தர்ப்பம் எனப்படுகிறது.

கண்ணபிரான் துவாரகைக்கு வெளியே இருந்தபோதெல்லாம் துவாரகையைக் காத்தவர் கருடன்.

மௌரியர்கள் கருடனை அதிர்ஷ்ட தெய்வமாக வழிபட்டனர். சமுத்திர குப்தன், குமாரகுப்தன் ஆகியோர் பொக்கிஷம் வளர பொற்காசுகளில் கருட முத்திரையிட்டனர்.

கழுகு இனத்தை சின்னமாகக் கொண்ட அமெரிக்கா வல்லரசாகவும், செல்வச் செழிப்புமிக்க நாடாகவும் வளர்ந்துள்ளது.

கார்கோடகன் பெயரைச் சொன்னால் ஏழரைச் சனியால் ஏற்படும் கஷ்டம் விலகும் என்று நளசரிதம் கூறுகிறது. அந்த கார்க்கோடகனை ஹாரமாக அணிந்திருக்கும் கருடனை துதித்தால் எல்லா கஷ்டங்களும் பறந்தோடும். இரவில் உறங்கும்போதும் வெளியூர் பயணங்களின் போதும், சுபகாரியங்கள் தொடங்கும் போதும் கருடனை துதித்து தியானம் செய்தால் இடையூறுகள் நேராது.

கருட பஞ்சமி விரதம் சுமங்கலிகளால் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இதனால் சுபீட்சம் பெருகும். கருடனுக்கு பிரஹஸ்பதி குலதேவதை. கன்னிப்பெண்களுக்கு திருமண பாக்கியம் கைகூடி வர குருபார்வை வேண்டும். ஆகையால் கருட பகவான் அருள் கிட்டினால் பெண்களுக்கு மனம்போல் மாங்கல்யம் அமையும்.

இத்தகைய பெருமை பெற்றவர் ஸ்ரீ கருட பகவான். கருட புராணத்தை அமாவாசை, பௌர்ணமி, மாதப் பிறப்பு, கிரஹணம், ச்ராத்தம் போன்ற முக்கிய தினங்களில் படிப்பது காரியத்தடைகளை அகற்றி ஜெயமளிக்கும். அறிவு வளரும். தோஷங்கள் நீங்கும். கஷ்டங்கள் தீரும். நல்வாழ்வு மலரும். கருட புராணத்தை வேதோத்தமர்களுக்கு தானம் செய்வதால் பித்ருக்களின் வாழ்த்துக்கிடைக்கின்றது. ஆன்மீகப் பெருமக்கள் அனைவரும் 'கருடபுராணம்' என்னும் இந்நூலைப் படித்து ஸ்ரீ கருட பகவானின் அளவற்ற கருணையால் வாழ்வில் சகல சௌபாக்கியங்களையும் பெறுமாறு பிரார்த்திக்கிறோம்.

– பதிப்பகத்தார்

# ... பொருளடக்கம்...



## இரண்டாம் பாகம்



## 3ம் பாகம்

# கருட புராணம்

## 1. பிறப்பும் இறப்பும்!

வேத வியாசரின் சீடர் சூதமா முனிவர். நைமிசாரண்யத்து முனிவர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு “பிரம்மோத்தர புராணம், சிவபுராணம், விஷ்ணு புராணம் எல்லாவற்றையும் தெள்ளத் தெளிவாகக் கூறினீர்கள்.



உலகில் எதனால் ஜனன, மரணங்கள் ஏற்படுகின்றன? உடலை விட்டுப் பிரிந்த உயிர் எதனால் சொர்க்கத்தையும், நரகத்தையும் அடைகின்றன? எதனால் சிலருக்குத் தீராத நோய்கள் உண்டாகின்றன? சிலர் ஆவியாய் அலைவது ஏன்? பிறக்காமலிருக்க என்ன செய்ய வேண்டும்? என்ன செய்தால் மோட்சம் கிடைக்கும்?" என்று கேள்விகளை அடுக்கினார்கள்.

சூதமுனிவர் கண் மூடி முதலில் குருநாதரை தியானித்தார். அடுத்து மகாவிஷ்ணுவை பிரார்த்தித்தார். பிறகு விழி மலர்ந்து, "சனகாதியரே! நீங்கள் கேட்ட அதே வினாக்களை முன்பொருமுறை ஸ்ரீ கருட பகவான் ஸ்ரீமத் நாராயணரிடம் கேட்டிருக்கிறார். அதற்கு திருமால் அளித்த விளக்கத்தை அப்படியே உங்களுக்குச் சொல்கிறேன். பாரத தேசம் கர்ம பூமி. தவம் செய்வதற்கு ஏற்ற இடம். அதிலும் இந்த நைமி சாரண்யம் மிகச் சிறப்பானது. இங்கு தவம் செய்யும் உங்களுக்குப் புண்ணிய புராணங்களைக் கூற நான் என்ன பாக்கியம் செய்திருக்கிறேன்? கருடனுக்குப் பெருமாள் அளித்த விடைகளானபடியால் அது 'கருட புராணம்' என்று பெயர் பெற்றது.

பிறந்த அனைவரும் என்றாவது ஒரு நாள் மரிப்பது உறுதி என்பதை எவரும் மறக்காமல், நேரத்தை வீணடிக்காமல், ஆண்டவன் கொடுத்த ஆற்றலை மழுங்கடிக்காமல் வாழ்வது பகவானுக்கு சந்தோஷத்தைத் தரும். பிள்ளைகள் ஒழுக்க சீலராக, நேர்மையாளராக வாழ்வதைக் கண்டு மகிழும் தந்தை அவர்.

பாவம் செய்தவன் வறுமையில் உழல்கிறான். புண்ணியவான் செல்வத்தில் புரளுகிறான். ஐஸ்வர்ய குலத்தில் உதித்தாலும் உழைத்துப் பொருள் தேட வேண்டும். எதற்கு? பூர்வ ஜென்ம வினையால் தரித்திரக்குடியில் பிறந்து நியாயமான தேவைகளைக் கூடப் பூர்த்தி செய்து கொள்ள முடியாமல் கஷ்டப்படுகின்றவனுக்கு உதவி செய்ய! அதனால் புண்ணியம் என்ற முதலுக்கு மேலும் வட்டி கிடைக்கிறது. இதனால் அடுத்தடுத்து செல்வக்குடியிலேயே நற்குணப் பெற்றோர்களுக்கு ஆரோக்கியமான, அழகும், புகழும் கொண்ட சந்ததியாய் ஜனனம் வாய்க்கிறது.

மூதாதையர் சேர்த்து வைத்த சம்பத்தையோ, தான் சம்பாதிப்பதையோ தீய வழிகளில் விரயம் செய்பவன் நரகத்தை அடைகிறான். ஒரு அறுந்த நூலைக் கூட எடுத்துக் கொண்டு மேலுலகம் போக முடியாது என்பதை ஒவ்வொருவரும் நிச்சயமாக உணர வேண்டும். ஈட்டிய செல்வத்தால் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போய் தீர்த்தமாடலாம். அறவழிகளில்

தருமம் செய்து சேமித்த புண்ணியம் உயிரின் கூடவே பயணம் செய்யும். அவனுக்கு சுவர்க்கத்தின் வாசல்கள் திறந்திருக்கும். தேவதூதர்கள் புன்னகையோடு வரவேற்பர்.

அவரவர் கர்மாக்களை விடக்கூடாது. திதி கொடுப்பதில், தர்ப்பணம் செய்வதில், விருந்தினரை உபசரிப்பதில் அசிரத்தை காட்டக்கூடாது. சிரத்தையோடு செய்ய வேண்டும் என்பதினாலேயே திதிக்கு, சிராத்தம் என்று பெயர் வந்தது. இதனால் பிதுருக்கள் சந்ததிகளுக்கு அகால மரணம், கொடுமையான வியாதிகள் வராமல் காப்பாற்றுவார்கள்.

பிதுருக்களே நரகத்தில் கஷ்டப்படும்போது வம்சத்தினைரைப் பற்றி யோசிக்க சக்தியிருக்குமா?

கடமையை வஞ்சனையின்றி செய்பவருக்கும், ஊதியத்தைத் தாராளமாகக் கொடுப்பவருக்கும் மறுபிறவியில் நல்ல வாழ்க்கை அமையும். சத் புத்திரன் பிறப்பான். அன்பான, குணவதியான வாழ்க்கைத் துணை கிடைக்கும். கல்வியில் மேன்மை பெறலாம். நற்கீர்த்தி தேடி வரும். பிறர் பொருளுக்கு ஆசைப்படாதவர்கள் ஐஸ்வர்யச் செழிப்புள்ள குலத்தில் ஜனிப்பார்கள்.

புண்ணியம், பாவம் இரண்டையும் செய்யாதவர்களுக்குத் தான் பிறவி வாய்க்காது. எம்பெருமான் திருவடிகளையே தியானம் செய்து கொண்டு சாளக்கிராமத்திலேயே பலகாலம் வாழ்ந்த உத்தமர் பரத மகராஜன். ஒரு மான்குட்டி மீது அவர் கொண்ட பாசம் மறுபிறவியில் கங்கைக் கரையில் ஒரு மானாகவே பிறக்க வைத்தது.

புண்ணிய வசத்தால் அவருக்கு பூர்வ ஜென்ம ஞாபகம் இருந்தது. அதனால் உறவான மான்களைப் பிரிந்து சாளக்கிரமத்தை அடைந்து புற்களை உண்டு வாழ்ந்தார். அடுத்த பிறவி உத்தமமான அந்தண குலத்தில் வாய்த்தது. எப்போதும் பூர்வஜென்ம நினைவு இருந்ததால் சகல சாஸ்திரங்களையும் கற்றாலும் ஜடமாக வாழ்ந்தார். எவர் எந்தப்பணி சொன்னாலும் செய்தார். எவர் கேலியையும் பொருட்படுத்தவில்லை! சொத்து சேர்க்கவில்லை! அவருக்கு மறுபிறவி இல்லாமல் முக்தி கிடைத்தது.

ஒரு புண்ணியத்தை அனுபவிக்கப் பிறவி எடுத்தாலும் நியாயம் பிசகாது, மனசாட்சிக்கு மதிப்புக் கொடுத்து வாழ்ந்தால் தொடர்ந்து வரும் பிறவிகள் உன்னதமானதாக, கீர்த்தியுடையதாக இருக்கும்.

ஏன் பிறவியை வெறுக்க வேண்டும்? ஸ்ரீமன் நாராயணர் தசாவதாரம் எடுக்கவில்லையா? துர்வாஸ முனிவர், அம்பரீஷன் துவாதசியன்று துளசி தீர்த்தம் அருந்தினானென்று அவனை 'மீனாக, ஆமையாக, பன்றியாக பல பிறவிகள் எடுக்கக்கடவது' என்று சபித்து விட்டார்.

பக்தனுடைய சாபத்தை பகவான் ஏற்றுக்கொண்டார். மச்சமாக அவதரித்தபோதும், அயக்கிரீவன் என்ற அசுரனை வதைத்து அவனிடமிருந்து வேதங்களை மீட்டு வந்தார். இதற்கு பொருள் தேவையில்லை. உடல்வலிமையும் ஒரு சொத்து தான். அதைக் கொண்டு தீனர்களைக் காப்பாற்றலாம். ஆனால் நான் பலசாலி என்ற அகந்தை வந்து விட்டால் அது வெண்ணையில் மறைந்திருக்கும் கசடு போலாகி விடும்.

அமிர்தம் கடையும் சமயம் மந்தரகிரி அமிழ்ந்தது. அதைத் தாங்கி உயர்த்த ஆமையானார். சாதனைகள் செய்கின்றவர்களுக்கு முடிந்த அளவு சொல்லாலும், செயலாலும் உபகாரமாயிருக்க வேண்டும். அதை விட்டுப் பொறாமைப்படுவதோ, பலவீனப்படுத்துவதோ பாபத்தைச் சேர்க்கும் என்பதை உணர்த்தினார்.

மலத்தை உண்ணும் பன்றி வடிவை அவர் கேவலமாக நினைக்கவில்லை. பிரளய நீரில் அழுந்திக் கிடந்த பூமியை மீட்டு வந்தது அவரது கொம்புதான்.

சனகாதி முனிவர்களைத் தடுத்த வைகுண்ட வாயிற்காப்போர்களான ஜய,விஜயரை பூலோகத்தில் போய் பிறக்கும்படி அவர்கள் சபித்தனர். அவர்கள் இரணியகசிபு, இரண்யாட்சனாகப் பிறந்தபோதும், இராவணன், கும்பகர்ணனாகப் பிறந்தபோதும், கம்சன், சிசுபாலனாகப் பிறந்தபோதும் அவர்களை சம்கரிக்க பரந்தாமனும் பூமியில் நரசிம்மராக, ஸ்ரீராமராக, ஸ்ரீகிருஷ்ணராக அவதரிக்க நேர்ந்தது.

பணியாட்கள் செய்யும் குற்றத்துக்கு எஜமானனும் பொறுப்பாகிறான் என்பதை இதன்மூலம் புரிந்து கொள்ளவேண்டும். இப்படித்தான் ஒன்றுக்கொன்று தொடர்பாகப் பிறவிகள் அமைகின்றன.

திதி காமத்தைக் கட்டுப்படுத்தாமல் தன் பதியான கச்யப முனிவரை சந்தியா காலத்தில் கூடலுக்கு அழைத்ததால், சாபமுற்ற ஜயவிஜயர்கள் அவள் கர்ப்பத்தில் பிரவேசித்தார்கள். அவர்கள் தான் இரண்யகசிபு, இரண்டயாட்சன். அனுமதிக்கப்பட்ட காமத்துக்கும் விதிமுறைகள் உண்டு. தகாத நேரங்களில் தரிக்கும் கர்ப்பம் வம்சத்துக்குக் களங்கமாகிவிடும். அத்தகைய காமமும் பாவத்தையே சேர்க்கும்.

தேவ அசுர யுத்தத்தில் தேவர்களுக்கு சகாயமாக போரிட்டு வெற்றி தேடித்தந்தவர் கட்வாங்க மகாராஜா. தேவர்கள் மகிழ்ச்சியோடு 'என்ன வரம் வேண்டுமென்று' கேட்டனர்.

"என் ஆயுளின் முடிவு எப்போது என்று சொல்ல வேண்டும்" என்றார் கட்வாங்க ராஜா. யமதர்மன் சித்திரகுப்தனைப் பார்க்க அவர் கணக்கைப் புரட்டி ஒரு முகூர்த்த காலம்" என்று கூறினார். கட்வாங்கன் உடனே பூலோகம் வந்து அனைத்தையும் துறந்து ஹரிநாம சங்கீர்த்தனம் செய்து கொண்டே மோட்சத்தை அடைந்தார்.

நாராயண நாமமே முக்தியின் திறவுகோல். ஆனால் அந்த நாராயணனே பூவுலகில் அவதரித்தால் குற்றங்களுக்கான தண்டனை களை அனுபவித்துத்தான் ஆகவேண்டும்.

இராமாவதாரத்தில் வாலியை மறைந்திருந்து அம்பு விட்டார். கிருஷ்ணாவ தாரத்தில் வேடனது கணை பாதத்தில் தாக்க துடிதுடித்து உயிர் விட்டார்.

இராமவதாரத்துக்கு இராவண வதம் மட்டும் காரணமல்ல. பிருகு மகரிஷியின் சாபமும் ஏற்பட்டி ருந்தது.

சுக்கிராச்சாரியார் தலைகீழாக தவமிருந்த சமயம், அசுரர்களோடு தேவேந்திரன் யுத்தம் செய்ய முற்பட்டான். அவர்கள் பிருகு முனிவரின் மனைவியிடம் சரணடைந்தார்கள்.

தேவர்கள் துரத்திக் கொண்டு வர அவர்களைத் தூக்கத்தில் ஆழ்த்தினாள் ரிஷிபத்தினி. திருமால் தன் சுதர்சனத்தை ஏவி கியாதியின் சிரஸைக் கொய்தார்.



அப்போது சமித்துக்களை சேகரித்து வந்த பிருகு முனிவர், "என் மனைவியைக் கொன்ற நீயும் துணைவியை இழந்து அலைவாயாக!" என்று சபித்து விட்டார். பிருகு மகரிஷி தன் தவவலிமையால் மனைவியின் தேகத்தோடு சேர்த்து கமண்டல நீரைத் தெளித்து உயிர் பெறச் செய்து விட்டார்.



கர்மபலன் அனுபவிக்காமல் விடாது. தன் நாபிக்கமலத்திலிருந்து பிரம்மனைத் தோற்றுவித்தவர் ஸ்ரீஹரி. அந்த நான்முகனின் நாசியிலிருந்து கட்டை விரல் அளவுள்ள பன்றிக்குட்டியாக வெளிப்பட்டு பெரியதாக வளர்ந்த வராஹ மூர்த்தியும் அவர்தான்.

பாட்டன்தான், பேரனாகப் பிறந்து பாட்டன் விட்டுப்போன சொத்துக் களையும், பாப, புண்ணிய பலன்களையும் அனுபவிக்கிறான்.

# 2. பாபங்களுக்கான பிறவிகள்

மகரிஷிகளே! ஸ்ரீமத் நாராயணர் கருடனைநோக்கி, "விநதையின் குமாரனே! இந்தப் பூலோகத்தில் 84 லக்ஷம் யோனி (கருப்பை) பேதங்கள் இருக்கின்றன. முதலாவது முட்டையிலிருந்து தோன்றுவதும் அண்டசமாகும். அவை 21 லக்ஷம். அடுத்து 21 லக்ஷம் தாவரங்கள் உற்பத்தியாயின. அவை உற்பிசம். மனிதர், விலங்குகள் என்று கருப்பையில் வளர்வது 21 லக்ஷம். அவை சராயுசம் எனப்படும்.

வியர்வையிலிருந்து வெளிப்படுவது ஸ்வேதசம். இந்த 21 லக்ஷமும் கொசு, அழுகின பொருளில், சேறு முதலானவற்றில் ஜனிக்கும் புழுக்கள் முதலியனவாகும்.

அநேகப் பிறவிகளில் செய்த புண்ணியத்தால் மானிட ஜென்மா வாய்க்கிறது. இது மிகவும் அரியதாகும். தன் எண்ணங்களைப் பேச்சால் வெளிப்படுத்த மனிதரால் மட்டுமே முடியும். ஐம்புலன்களையும் சிறப்பாக இயக்கும் பகுத்தறிவு என்ற ஆறாவது அறிவையும் மனிதர் பெற்றிருக் கின்றனர்.

பக்தி, தியானம், யோகம் எல்லாம் மனிதர்களால் மட்டுமே செய்ய முடிந்தவை. காளை, பசு, புறா, கருடன், அன்னம், கிளி, மான், யானை, குரங்கு போன்றவை சிறிது அறிவு பெற்று வாழும்.

தெய்வ பக்தியுடன் புண்ணிய நூல்களைப் படிப்பவரும், கற்றுக் கொடுப்பவரும், பிரசங்கிப்பவரும் உயர்ந்தவர்களாகக் கருதப்படுவர். ஞானிகள் அவர்களிலும் மேலானவர்.

தாவரம், நீர்வாழ்வன (மீன்) ஊர்வன ( பாம்பு, தேள்) பறவை, விலங்கு என்ற ஐந்து பிறவிகளில் பிறருக்கு உபகாரமாயிருந்தால் தான் மானிடப்பிறவி ஆறாவதாக வாய்க்கிறது. அதில் உத்தமனாய் இருப்பவர் தேவனாகிறார். இல்லையெனில் மீண்டும் முட்செடி, எருக்கு, ஊமத்தை போன்ற செடிகளாவான். தருமவான், தாவரமானால் கனி கொடுக்கும் மரமாவான். மூலிகைச் செடியாவான். முப்பத்து முக்கோடி தேவர்களும் வாழும் அரசமரமாவான்.

செம்படவர் வலையில் சிக்கிய மீன், எவர் பசிக்காவது உணவாகி, அடுத்த பிறவியை அடைகிறது. கோயில் புற்றுக்குள் இருக்கும் நாகம், பலராலும் வணங்கும் பேறு பெறுகிறது. மற்றவரைச் சொல்லால் கொட்டுபவனுக்கு,

விருச்சிகப்பிறவி அமைகிறது. தன் குடும்பத்தை மட்டுமே பேணுபவன், நண்டாகப் பிறக்கிறான். பொதுநல உணர்வு நிச்சயம் வேண்டும்.

குடும்பம், நாடு இரண்டுக்கும், பிரயோஜனப்படாதவர் வௌவாலாகத் தொங்குகின்றனர். ஆலமரமானாலும் ஆலய வாசலில் பக்தர்களுக்கு நிழல் தரும்படி அமைவது புண்ணியம். காட்டிலுள்ள ஆலமரம், விறகுக்குதான் ஆகும். யாகத்துக்கு சமித்துக்கள் தருபவை அடுத்த பிறவிக்குப் போகின்றன.

என்னை அழகாக அலங்கரிப்பவர்கள் மயிலாக, கிளியாக, புறாவாக ஜெனனமெடுப்பர். நீ என்னைச் சுமப்பதால் உன் இனத்தவர் கௌரவிக்கப் படுகிறார்கள். கூர்மையான நோக்குள்ளவர், வல்லூறாகப் பிறப்பர். பசியென்று வந்தவர்களுக்கு வசதியிருந்தும் அன்னமிடாதவர்களுக்கு பருந்துப் பிறவி வாய்க்கும்.

மற்றவரை எதற்காவது காக்க வைத்தவர்கள், கொக்காகப் பிறக்கின்றனர். ஆலயத்தில் அபிஷேகப்பால் தரும் பசுவாக, நேர்ந்து விடும் காளையாக, ஸ்வாமி ஊர்வலத்தின் முன்னால் வரும் யானையாகப் பிறப்பதற்குப் புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

குருவை, சாஸ்திரம் படித்தவரை நையாண்டி செய்தவன் புலியாகிறான். நண்பனுக்கு துரோகம் செய்தவன் நரியாகவும், கழுதையாகவும் பிறப்பெடுக்கிறான். காது கேளாதவரை இகழ்பவர் அங்கஹீனனாக ஜனிக்கிறான். தாகத்துக்கு நீர் தராதவர் காக்கையாகப் பிறக்கின்றனர்.

பிறரால் ஏற்பட்ட லாபங்களை தான் மட்டுமே அனுபவிப்பவர் புழுவாகப் பிறக்கின்றனர். அதிகாரியானவர் பழைய நீர்நிலைகளைப் பாழடைய விட்டாரானால், நிலத்தில் உழும் எருதாகப் பிறக்கிறார். விருந்தினருக்கு ஒளித்து அறுசுவை உணவை உண்பவர் பிசாசாக அல்லய நேரிடும். பெற்றோர், இல்லாள், சந்ததி இவர்களைக் கைவிட்டவர் ஆவியாக அல்லாடுவர்.

அதிதியை ஏளனம் செய்பவர் தரும் சிரார்த்தத்தையும், தர்ப்பணத்தையும் பிதுருக்கள் ஏற்றுக் கொள்வதில்லை. கொலை, கொள்ளை செய்பவர்கள் நூறு ஆண்டுகள் ஆவியாக அல்லாடுகிறார்கள். தானம் கொடுத்ததைப் பறித்துக் கொள்பவர்களுக்கு ஓணான்பிறவி வாய்க்கிறது. அவர் மானிடப்பிறவி எடுக்கும்போதும் அற்பாயுளே வழங்கப்படும், இல்லையேல் தரித்திரம் சூழ்ந்து கொள்ளும்.

மற்றவர் பிழைப்பைக் கெடுத்து சுகம், அனுபவிப்பவர் திமிங்கிலமாக, மீனாகப் பிறக்கின்றனர். அடுத்தடுத்து முயல், மான் முதலான ஜென்மங்களில் உழல்கின்றனர். தன் புத்திரியைத் தவறான செயலில் ஈடுபடுத்துபவன், மலத்தில் ஊறும் புழுவாகவும், அடுத்தடுத்து வேட்டைக்காரராகவும், காட்டு வாசியாகவும் பிறக்கின்றான்.

விரதம், சிரார்த்தம் முதலான புண்ணிய தினங்களில் சம்போகத்தில் ஈடுபடுபவர் பன்றியாக, கோழியாக ஜெனிக்கின்றனர். கோள் சொல்பவர் பல்லியாக, தவளையாகப் பிறக்கின்றனர். உழைப்புக்குத் தகுந்த ஊதியம் கொடுக்காதவர் அட்டைகளாகப் பிறந்து, இரத்தத்தை உறிஞ்சுகின்றனர்.

கொலை செய்பவருக்குக் குஷ்டரோகம் போன்ற கொடிய நோய்கள் வரும். கிளி போன்ற பறவைகளைக் கூண்டிலடைத்து சித்திரவதை செய்பவருக்கு ஜெயில் வாசம் கிட்டும். எந்த ஜீவனை ஹிம்சித்தாலும் பிறந்தது முதல் நோய் வாட்டும். மாமிசம் புசிக்கின்றவருக்கு சிங்கம், சிறுத்தை, ஓநாய் போன்ற பிறவிகள் வாய்க்கின்றன.

தீய சொல்லும், பிறர் நிந்தனையும் பேசுகின்றவர்கள், மறுபிறப்பில் ஊமையாகின்றனர். தெய்வத்துக்கு அளித்த நிவந்தத்தில் வாழ்பவர் தேனீக்களாக பிறக்கின்றனர். அநியாயமாக லஞ்சத்துக்கு வசப்பட்டு தீர்ப்பளிப்பவர் கொசுவாக, ஈயாக, மூட்டைப்பூச்சியாகப் பிறவி எடுப்பார்.

சந்தியா வந்தனத்தை விட்டவர், தெய்வ நம்பிக்கை இல்லாதவர் பன்றிகளாகப் பிறக்கின்றனர். அடுத்து பணியாட்களாக வாழ்க்கை நடத்தும் தலைவிதி அவர்களுக்கு வாய்க்கிறது.

மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை மூன்றும் மனிதரை நரகத்துக்கு இழுத்துச் செல்லும் இரும்பு சங்கிலிகள். இழுக்கான செயல்களைப் புரியும் இந்த மனித மிருகங்கள் தனக்குத்தானே கொள்ளியிட்டுக் கொள்கிறார்கள்.

தருமங்களைப் புறக்கணிப்பவர்கள் மறுபிறவியில் திறமையற்றவர்களாக, பணம் சம்பாதிக்க வழி தெரியாதவர்களாக ஆகிறார்கள். அவனிடம் பேராசை குடியிருக்கும். மனசாட்சிக்கும், மனிதாபிமானத்துக்கும் மதிப்பளிக்க மாட்டான். திருப்தி என்பதே இருக்காது. மங்கைக்கும், மதுவுக்கும் அடிமையாகி பல அக்கிரமங்களை நடத்துவான். இப்படிப்பட்டவர்கள் தான் நரகத்தில் உழல்கிறார்கள். மறுபிறவியில்

விபத்தில் அகால மரணமடைகின்றனர். பொருளைக் குவித்து அழகு பார்த்தவருக்கு மறுபிறவியில் சொந்தங்களால் ஏற்படும் பெருமை கிட்டாது.

ஐம்புலன்களையும் அலைய விடாமல் கட்டுப்படுத்தி ஒழுக்கமாக வாழ்பவருக்கு சொர்க்க பதவி கிட்டுகிறது. பொன் ஆபரணங்கள் சரீரத்துக்கு அழகு, புகழாரம் தான் மெய்யான அலங்காரம். உடல் நசித்த பின்னும் நிலைத்து நிற்கும்.

## 3. தான தருமங்களின் மகிமை!

வைனதேயா! நாவுக்கு ருசியானதையெல்லாம் உண்டால் வயிறு கெட்டு பல வியாதிகளை உற்பத்தி செய்து அழகை அழிக்கிறது. ஆலயத்தில் காமக்கண் கொண்டு இளம் நங்கையரைப் பார்ப்பதால் மனதில் பக்தி சிதைந்து பாவ விதைகள் ஊன்றப்படுகின்றன.

காட்டில் இருக்கும் புள்ளிமான் புல்லாங்குழல் ஓசையில் கிறங்கி ஸ்தம்பித்து நிற்கும். அப்போது வேடன் அதன் மீது அம்பெய்துபிடித்து விடுவான். எரிகின்ற நெருப்பைக் கனியென்று எண்ணி, விட்டில் பூச்சிகள் அதைப் பறிக்கிறேன் என்று உயிரை விடுகின்றன.

அது போன்றதே முறையற்ற காமமும். வியாதியையும், அவப்பெயரையும் வாங்கித்தரும். காதால் கெட்டது மான். கண்ணால் அழிந்தது விட்டில். தேனை சேகரிக்கும் தேனீக்களை வேடர்கள் தீப்பந்தம் கொளுத்தி சாகடித்து விட்டு தேனைக் கவர்ந்து கொள்கிறார்கள். புண்ணிய காரியங்களுக்குக் கொடாமல் சேமிக்கும் செல்வம் திருடர்கள் உடமையாகி விடும். இங்கே நா ருசியால் கெட்டது தேனி.

ஆண் யானையைப் பிடிக்க பெண் யானையைக் காட்டுவர். ஆசையோடு ஓடிவரும். ஆண் யானை குழிக்குள் விழுந்து மனிதருக்கு அடிமையாகி விடும். பிறர் மனைவியை இச்சிப்பது தனக்குத்தானே வெட்டிக் கொள்ளும் படுகுழி.

தூண்டில் முள்ளின் முனையில் உள்ள புழுவை இழுக்க முற்படும் மீன் தன் ஆயுளை இழக்கிறது. இங்கே நுகர்ச்சியால் அழிவு ஏற்படுகிறது. தனியாய் பிறந்த மனிதன் தனியாய் மடிகிறான். இடையில் ஏன் மாய வலைகளில் சிக்கி சுய கௌரவத்தை இழக்க வேண்டும்?

ஒரு செல்வந்தன் பழைய வீடொன்றை வாங்கிப் புதுப்பித்தான். வாசல் மட்டும் குறுகலானது. வீட்டில் சகல வசதிகளும் இருந்தது. ஒருநாள் அவன்

காலம் முடிந்தது. வெளியூரிலிருந்து பிள்ளை வரவுக்காகத் தாமதித்ததால் உடல் விறைத்துப் போயிற்று. இல்லத்தில் நடத்தும் சடங்குகள் முடிந்து மயானத்துக்கு உடலை எடுத்துச் செல்ல முற்பட்டபோது வாசற்படி தடுத்தது. எப்படி எப்படியோ முயற்சித்தும் பலனில்லை.

"வாசல் பகுதியை சற்றே அகலமாக்க இடிப்பதைத் தவிர வேறே வழியில்லை. இல்லையென்றால் பிணத்தின் காலைத்தான் வெட்ட வேண்டும்" என்று சலித்துக் கொண்டார் ஒரு உறவினர்.

கடப்பாரையோடு வந்தார் மற்றொருவர்.

அழுது அழுது முகமெல்லாம் வீங்கிப் போன இறந்தவரின் மனைவி சொன்னாள்.

"ஐயோ! வாசலை இடிக்காதீங்க! அவர் மனசு பொறுக்காது. இது வெறும்உடம்பு தானே! காலை வெட்டிக்கோங்க. கொஞ்ச நேரத்திலே சாம்பலாப் போகப்போகிறது தானே!" என்றாள்.

இறந்தவனின் ஆத்மா அழுதது. 'இவளுக்காக தர்மத்தைக் கை விட்டேனே! இவள் உடலை அலங்கரித்து மகிழ்ந்த எனக்கு இவள் தந்த வெகுமதி என் உடலை ஊனப்படுத்தி வழியனுப்புகிறாளே! இது எனக்கு தக்க தண்டனைதான்" என்று சொல்லிக் கொண்டது.

பாபம் அளவு கடந்து போய் விட்டால் நரக தண்டனைகளும், ஈனப்பிறவிகளும் எடுத்தது போதாமல், பூவுலகிலும் கீழ்க்குணமுடை யோருக்குப் பிறந்து மேலும் கஷ்டத்தை அனுபவிக்க நேரிடும்.

வால்மீகி கொள்ளையடித்துக் கொண்டு வந்ததை அனுபவித்த பெற்றோரும், இல்லாளும் அவர் தேடிய பாபத்தைப் பங்குபோட்டுக் கொள்ளத் தயாராக இல்லை! அதனால் தான் அவர் துறவியானார்! இராமாயண மகாகாவியமும் உலகக்குக் கிடைத்தது.

சொர்க்கத்துக்கு செல்லும் வழியில் வெளிச்சமாய் இருப்பது நாம் செய்யும் தான தருமங்கள் தான். கருமிகளுக்கும், பாவிகளுக்கும் ஒளியே தெரியாது. வெறும் இருட்டுத்தான்.

தான தருமங்களும் கூட இனிமையுடன், பக்தி, சிரத்தையுடன் செய்யப்பட்டால், நடைபாதை, கல், முள் என்று கரடு முரடாக இல்லாமல் மணம் வீசும் நந்தவனமாக, விமானத்தில் செல்லும்படி இருக்கும்.

ஏழைகளுக்கும், அநாதைகளுக்கும் தாராளமனதுடன் உதவி செய்கின்றவர்களுக்கும் முக்தி கிட்டும். தீயவழிகளில் சம்பாதித்த செல்வத்தால் தேடப்படும் புண்ணியம் நல்ல பிறவியை அளிப்பதில்லை.''

## 4. விருஷோற் சர்க்கம்

"வைகுண்டவாசா! மானிடர்கள் மடிந்தபிறகு அவர்களுக்கு பிரேத ஜன்மம் வராமலிருக்க என்ன வழி?'' என்று கருடாழ்வார் கேட்டார்.

அதற்கு திருமால், "கருடா! மனிதனின் உடலிலிருந்து உயிர் பிரிந்த பிறகு ஆவி வடிவாகிறான். அதுவே பிரேத ஜன்மம். அது ஏற்படாமலிருக்க 'விருஷோற் சர்க்கம்' என்ற கர்மாவைச் செய்ய வேண்டும். காளைக் கன்றைத் தானமாகக் கொடுப்பவர்களுக்குப் பிரேதஜன்மம் வாய்ப்ப தில்லை. விருஷபம் என்றால் காளைமாடு.

ஐந்து வயதுக்குட்பட்டவர் காலமானால் அவருக்குப் பிரேத ஜன்மம் கிடையாது. இதில் ஆண்–பெண் என்ற பாகுபாடு இல்லை.

இறந்த பிறகு எருதுக்கன்று தானம் செய்தாலும் பிரேத ஜன்மா அழிந்து விடும். ஒரு மனிதன் மரித்தால் பதினோராம் நாள் செய்ய வேண்டிய கர்மா இது. இதைச் செய்யாமல் திதி கொடுத்தாலோ, பல ஹோமங்களைச் செய்தாலோ, விரதங்களை அனுஷ்டிப்பதாலோ எந்தப் பலனும் இல்லை. இந்த கர்மா செய்யாதவர் மோட்ச லோகத்துக்குள் செல்ல முடியாது. யமன் கொண்டு போவான். இந்த தானத்தை இறந்தவரின் மனைவி, பிள்ளைகள், பெண் செய்வது உசிதம். புத்திரன் இல்லா விட்டால் பேரன், பெண் வயிற்றுப் பேரன் நடத்தலாம்.

"ஸ்ரீமந் நாராயணா! வாரிசு இல்லாதவர்களுக்கு உத்தரக்கிரியை செய்ய யாருக்கு உரிமை உண்டு?'' என்று கருடன் கேட்க,

பெருமாள், "விநதா ஸுதா! நல்ல கேள்வி கேட்டாய்! ஒவ்வொரு தம்பதியருக்கும் சந்தான பாக்கியம் என்பது இன்றியமையாதது. அப்படி புத்திரப் பேறற்றவர்கள். ஏழைக் குழந்தைகள் வளர உதவ வேண்டும். அப்படி தான தருமங்களும் செய்யாமல், தீர்த்த யாத்திரையும் பண்ணாமல், புத்திரர்களும் கர்மாவை விட்டு விட்டால் நெடுங்காலம் அந்த ஆவி பசி, தாகத்தோடு அலையும். அவர்கள்தான் அழுகின பொருட்களில் புழுவாகப் பிறக்கிறார்கள்.

ஆதலால் வியாதி வருவதற்குமுன், முதுமை தள்ளாட்டுவதற்குள், க்ஷேத்ராடனம், தான தருமம் போன்றவற்றைச் செய்து புண்ணியங்களைக் குவித்துக் கொள்ள வேண்டும்.

பிள்ளைப்பிறப்பு, கல்யாணம், சொத்து வாங்குவது போன்ற சுப விழாக்களில் செல்வம் கரைவது தெரிகிறது. அதுபோல் சேமித்த புண்ணியங்களும் செலவாகி விடும் என்பதை மானிடர் உணர வேண்டும். அதனால் புண்ணியங்களை மேன்மேலும் வளர்த்துக் கொண்டேயிருக்க வேண்டும். அவரவர் புண்ணியம் அவரவர் வம்சத்தினரையே சேரும்.

"தானே தானம் செய்வதற்கும், பிள்ளைகள் செய்வதற்கும் வித்தியாசம் உண்டா?" என்று கேட்டார் கருடாழ்வார்.

"சாஸ்திர விதிப்படி தானே மனத்தூய்மையோடும் உறுதியோடும் செய்யப்படும் தானத்திற்குப்பலன் அதிகம். ஒருவர் மரணமடைந்தபின் செய்யும் ஆயிரக்கணக்கான தான தருமங்களும் தரும்பலனை உயிரோடிருக்கும்போதும், இறக்கும் தருணத்திலும் செய்யப்படும் ஒரே ஒரு தானம் தந்து விடும்.

வயதான ஒரு உயிர் இழுத்துக் கொண்டிருக்கிறதென்றால் சில தான தருமங்கள் செய்தால் சாந்தியடைந்து விடும்.

ஒருவர் செய்யும் தானம் நல்லதாக இருக்க வேண்டும். பால் வற்றிப்போன, மெலிந்த மாடுகளைத் தானம் செய்வதால் எந்தப்பயனு மில்லை. தரிசு நிலங்களை தானம் கொடுக்கக்கூடாது. பவித்ர மோதிரத்தைத் தானம் பெற்றவன் தாசிக்கு அதை அன்பளிப்பாகக் கொடுத்தால் புண்ணியம் கிடைக்காது. அதனால் நல்லவர்களுக்கே தானம் செய்ய வேண்டும்.

புண்ணிய ஸ்தலங்களில், சமுத்திரக்கரையில் செய்யப்படும் தானம் கோடி பங்கு பலனைத் தரும். கோதானம் வாங்குபவர் அந்தப் பசுவை பராமரிப்பவராக இருக்க வேண்டும்.

அந்தணன் குலத்தால் மட்டுமின்றி, நன்னடத்தையுடையவனாகவும், வேதம் படித்தவனாகவும் இருந்தாலே தானம் பெறும் தகுதியுடையவ னாகிறான். ஒழுக்கம் கெட்டவன் வாங்கும் தானம் அவனை நரகத்தில் சேர்க்கிறது. பசுவைத்தானம் வாங்கியவர் அதை விற்றால் அவரது தலை முறையினரும் நரகத்தில் உழல்வார்கள்.

ஒரே பசுவை பலருக்கும் தானம் கொடுப்பது பாபம். குடும்பத்தைக் காப்பது எப்படிக் கடமையோ அதே போல் மோட்சமடையவும், வருமானத்தில் ஒரு பகுதியைத் தான தருமம் செய்யவும் செலவிட வேண்டும்.

ஒரு மலட்டு தரித்திரன் குறைந்த அளவு தான தருமங்களைச் செய்து மரிக்கிறான். ஒரு செல்வந்தன் கஞ்சத்தனமாய் காலம் கழித்து இறந்தபின் புதல்வர்களால் சாஸ்திர முறைப்படி தானங்கள் செய்யப்பெற்று பிரேத ஜென்மாவை அழித்துக் கொள்கிறான். இருவரின் எவருக்கு உன்னதமான கோலோகம் கிடைக்கும் தெரியுமா? வறியவனே தேவர்களால் உபசரிக்கப்படுகிறான்.

புண்ணிய க்ஷேத்திரம், புண்ணிய நேரம் இரண்டும் இல்லாத காலத்தில் அளிக்கப்படும் விருஷோற்சர்க்கமும் உயர்ந்ததே!"

"புண்ணிய காலம் எவை எவை என்று தேவரீரே விளக்க வேண்டும்" என்று வினயத்தோடு கேட்டார் சுபர்ணன்.

"கார்த்திகை மாதப் பௌர்ணமி, உத்தராயண காலத்து துவாதசிகள், விசேஷமானவை. ஒழுக்கமுள்ள சாஸ்திரிகளைக் கொண்டு ஹோமம் வளர்த்து, நவக்கிரஹங்களையும், மாதுர் தேவதைகளையும் பூஜித்து, என்னையும் (திருமால்) அர்ச்சித்து, மந்திரநீரால் ரிஷபக் கன்றினை நீராட்டி, ஆடை, சதங்கை இவைகளால் அதை அலங்கரித்து, மலர் மாலை அணிவித்து, மேலும் நான்கு காளைக்கன்றுகளோடு யாக அக்கினியை வலம் வரச் செய்ய வேண்டும்.

பிறகு வடக்கு பார்த்து நின்று தானம் தரும் காளைக்கன்றை நோக்கி, "திருவடிவாக உள்ள நீயே ரிஷபமானாய்! நீயே ஆதியில் பிரம்மதேவனால் படைக்கப்பட்டாய்" என்று கூறி அதைத்தானம் கொடுக்க வேண்டும். இதுதான் விருஷோற்சர்க்கம் எனப்படும் தானம்.

உயிரோடிருக்கையில் இதைச் செய்பவர், அந்தக் காளைக்கன்றின் வாலில் மந்திரம் ஜெபித்த நீரை விட்டு அந்த நீரைக் கையிலேந்தி சிரஸில் தெளித்துக் கொள்ள வேண்டும்!



# 5. யம லோகமும், பிண்ட சரீரமும்!

"பெற்றோருக்கு இறந்த பிறகு கிரியைகளும், சிரார்த்தமும் செய்ய வேண்டியது பிள்ளைகளின் கடமை" என்றார் பகவான்.

"ஸ்வாமி, யமலோகத்தைப் பற்றியும் கூறியருள வேண்டும்" என்று கோரினார் கருடாழ்வார்.

"வைனதேயா! பூலோகத்திலிருந்து 80,000 காத தூரத்திலுள்ளது யமபட்டணம். அதன் எஜமானன் எமதர்மராஜன். பூவுலகில் எவரெவர் ஆயுள் முடிவுற்றதோ அவர்களின் உயிர்களை கவர்ந்து வரும்படி தன் தூதர்களை அனுப்புவது அவன் பணி. யமகிங்கரர்கள் மூவரும் கருத்த தேகத்தில் கரிய ஆடைகளை அணிந்து கொண்டு பயங்கரமான தோற்றத்துடன் இருப்பார்கள். அவர்கள் பாசம் முதலான ஆயுதங்கள் வைத்திருப்பார்கள். ஆயுள் முடிந்த ஜீவனை அவர்கள் பாசக்கயிற்றால் பிணைப்பார்கள். கட்டை விரல் அளவுள்ள சூக்ஷ்ம தேகத்தில் அந்த ஆத்மாவை அடைத்துக்கொண்டு யமலோகத்துக்குச் செல்வர்.

"காலதேவனுக்கு முன்னால் அவர்களை நிறுத்தி கூற்றுவன் ஆணைக்காகக் காத்திருப்பர். யமதேவன் "இவர்களை இவர்கள் வாழ்ந்த இல்லத்திலேயே விட்டு வாருங்கள். பன்னிரண்டாம் நாள் கர்மா முடிந்த பிறகு இங்கு கொண்டு வரலாம்" என்று கட்டளையிடுவான். யம தூதர்கள் தலைவன் உத்தரவை நிறைவேற்றுவர்.

காற்றாலான அந்த உயிர் இடுகாட்டில் தன் சரீரம் எரிக்கப்படும் சிதைக்கு பத்து முழ உயரத்தில் இருந்து எல்லாவற்றையும் பார்க்கும். புண்ணியாத்மாக்கள் உடல் எரிந்தது கண்டு மகிழும். பாவாத்மாக்கள் ஓலமிட்டு அழும்.

அந்த உயிர் பன்னிரண்டாவது நாள் கர்மா முடிந்ததும் ஆவி உருவிலிருந்து பிண்ட வடிவைப்பெற்று பதின்மூன்றாம் நாள் யம புரிக்குச் செல்கிறது.

உயிர் நீங்கப் பெற்ற சரீரத்தை மயானத்தில் கொளுத்திய பிறகு அந்த ஜீவன் வாழ்ந்த இல்லத்தில் பன்னிரண்டு நாட்களுக்கு அந்த ஆத்மாவுக்குப் பிண்டம் போட வேண்டும். இல்லையென்றால் அந்த உயிர் தான் வசித்த வீட்டின் வெளியே நின்றபடி அங்கு போவோர் வருவோரிடம் தன்பசி, தாகத்தைச் சொல்லிக் கதறி அழும்.

அந்த உயிருக்கு முதல் நாள் இடும் பிண்டத்தால் தலை உண்டாகும். இரண்டாம் நாள் போடும் பிண்டம் கழுத்தையும், தோட்களையும் ஏற்படுத்தும். மூன்றாம் நாள் பிண்டத்தால் உருவாவது மார்பு. நான்காம் நாள் பிண்டம் வயிற்றையும், ஐந்தாம் நாள் பிண்டம் தொப்புளையும், ஆறாம் நாள் பிண்டம் பிருஷ்டத்தையும், ஏழாம் நாள் பிண்டம் குய்யத்தையும், எட்டாம் நாள் பிண்டம் தொடைகளையும், ஒன்பதாம் நாள் பிண்டம் கால்களையும், பத்தாம் நாள் பிண்டம் முழு தேகத்தையும் தருகிறது. பத்து நாட்களும் போடப்படும் பிண்டத்தால் இறந்து போன ஜீவனுக்கு பிண்ட சரீரம் பூரணமாகக் கிடைக்கிறது.

அடுத்து வரும் 11, 12–வது நாட்களிலும், உயிர் தான் வாழ்ந்த வீட்டிலேயே கொடுக்கப்பட்டதை உண்டு தங்கியிருக்கும். அதன் பிறகு உயிர் யமபுரிக்குப் பயணப்படுகிறது.

13–ம் நாள் யமதூதர்கள் அந்த ஜீவனை பாசக்கயிற்றால் கட்டி இழுத்துச் செல்கிறார்கள். ஒரு நாளைக்கு 247 காத வழிப்பயணம் செய்தாக வேண்டும். இரவு, பகல் என்று ஓய்வு கிடைக்காத பிரயாணம். பசியும், தாகமும் அந்த ஜீவனைத் துன்புறுத்தும்.

யமலோகம் போகும் வழியில் வைவஸ்வத பட்டிணம் வரும். அங்கே நடமாடும் பிராணிகளைப் பார்த்தால் குலை நடுங்கும். அங்கே கொதிக்கும் வெந்நீர் குளங்களைக் காணலாம். மேகத்திலிருந்து இரத்தமழை பொழியும். பிண்டசரீரம் "தாகமாயிருக்கிறதே! குடிக்கத் தண்ணீரும் கிடைக்காத ஊரா இது" என்று புலம்பிக் கொண்டே வரும்.

"ஐயோ! மகனே! உன்னைத் தாலாட்டிய மார்பு இவர்கள் முரட்டுத் தனமாக இழுத்ததில் எப்படி ரணமாகயிருக்கிறதென்று அறிவாயோ? கோயிலுக்குப் போகாமல் கூத்தரங்கத்தில் காலத்தைக் கழித்தேனே! தெய்வ நாமாவைச் சொல்லாமல் திட்டிய நாக்கு புரளவும் மறுக்கிறதே! தெருவெல்லாம் நெருப்பாய் கொதிக்கிறதே! மகான்களை தூஷித்தேனே! சந்தியா வந்தனத்தைக் கைவிட்டேனே! இப்படியாகும் என்று எனக்கு யாரும் உணர்த்தவில்லையே! புராணங்கள் கட்டுக்கதை என்று ஏளனம் செய்தேனே! ஒரு விரதமும் இருந்தேனில்லையே! அமாவாசை தர்ப்பணத்தை மறந்திருந்தேனே! பிறர் குற்றம் காண்பதே பெருமை யென்றிருந்தேனே! இப்படிப் பலவிதமாய் உயிர்கள் ஓலமிட்டு கதறும்.

அப்போதெல்லாம் யம கிங்கரர்கள் "பேசாமல் வா" என்று அதட்டி கையிலுள்ள ஆயுதத்தால் துன்புறுத்தி இழுத்து வருவர்.

"அப்படியானால் அந்த ஜீவன்கள் யமபுரியை அடைய எத்தனை காலமாகும்?" என்று கருடன் கேட்டார்.

"இப்போது நான் சொன்னதெல்லாம் பாபாத்மாக்களுக்கு. புண்ணியம் எத்தனையளவு இருக்கிறதோ அத்தனை சீக்கிரம் யம புரிக்குப் போய் விடலாம். பாவிகள் போக ஒரு வருடமாகும்.

"அபூர்வமான மானிடப்பிறவி கிடைத்தும் நீ பொருள் தேட தீய வழிகளைக் கடைப்பிடித்தாயே! யாசகர்களைப் போ வென்று விரட்டியடித்தாயே!" சகோதரி சொத்தைப் பறித்தாயே! கற்பைச் சூறையாடியவனே! அதர்மச் செயல்களுக்கான தண்டனையை அனுபவிக்கும் போது அழுதால் சரியாயிற்றா!" என்று அவரவர் புலம்பலிலிருந்து பாபத்தைக் கண்டுபிடித்து யமதூதர்கள் மிரட்டி ஹிம்சித்துக் கொண்டு வருவார்கள்.

ஜீவனுக்கு மாசியம், சோதகும்பம் என்று சுற்றத்தாரால் மாதந்தோறும் வைக்கப்படும் பிண்டமே உணவு.

சிலநேரம் புயல் காற்றால் ஜீவன் அலைக்கழியும். சில இடங்கள் முட்காடாய் இருக்கும். புதரில் புலி, சிங்கம் போன்ற கொடிய மிருகங்கள் உறுமும். தீயென அதன் விழிகள் நடுங்க வைக்கும். அங்கே கொஞ்ச நாட்கள் தங்கி விடுவார்கள்.

மடிந்த 28–ம் நாளில் தன் குமாரனால் இடப்பட்ட பிண்டத்தை அங்கே புசிப்பர். முப்பதாம் நாள் 'யாமியம்' என்ற நகரத்துக்கு ஜீவனைக் கொண்டு செல்வர். அங்கே ஏராளமான பிரேத ஜீவன்கள் கூட்டம் கூட்டமாய் குடியிருக்கும். அங்கே சற்று நேரம் தங்கிய பின் இரண்டாவது மாசிக பிண்டத்தை உண்டு யமதூதர்களால் இரவு பகலென்றிராமல் பருக்கை கற்கள் நிறைந்த முட்காட்டில் இழுத்துச் செல்லப்படுவார்கள். ரோதனம் செய்தால் சாட்டையடி கிடைக்கும்.

அடுத்து சங்கமன் ஆளும் சௌரி நகரத்தை அடைவார்கள். அங்கே 3–வது மாதப் பிண்டத்தை ஏற்று பயணத்தைத் தொடர்வர். இப்படி 4,5,6–வது மாசிக பிண்டத்தை உண்ட பின்'வைதரணி'எனப்படும் துர்நாற்றமுடைய நதியை அடைவார்கள். வழியில் கூற்றுவர்களால் அவர்கள் அடையும் துன்பங்கள் அளவிட முடியாதது.

பூமியில் வாழுங் காலத்தில், கோதானம் செய்தவர்களுக்கு, பசுவின் வால் கயிறு போல் முன்னால் தெரியும். அதைப்பற்றிக் கொண்டால்

நொடியில் அக்கரையில் வீசி எறியப்படுவர். இல்லாதவர்கள் அந்த நதியிலே 'தொப்'பென்று விழவேண்டியது தான்! அந்த வைதரணி நதி இரத்தம், சீழ், காதுகுறும்பை, சிறுநீர், வியர்வை இவற்றாலானது. இதில் அட்டைகளும், புழு, பூச்சிகளும், பூரான்களும் ஏராளம்.

இறந்தபிறகு சந்ததியினர் 'வைதரணி கோதானம்' நடத்தினால் மடிந்த உயிருக்கு விமோசனம் உண்டு. இல்லையேல் நெடுங்காலம் அதில் மூழ்கித் தவிப்பதைத் தவிர வேறு வழி கிடையாது.

அடுத்து யம கிங்கரர்கள் நமனுக்குத் தம்பியான 'விசித்திரன்' ஆளும் நகருக்குக் கொண்டு செல்வர். ஏழாவது மாசிகப்பிண்டத்தை சில பைசாசங்கள் தட்டிப் பறித்துக் கொள்ளும். இறைவழிபாடு நடத்தாதவர் களுக்கும், கொடிய பாதகங்கள் செய்தோருக்குமே இவ்வாறு நிகழும். ஏழாவது மாதத்தில் பாதிப்பயணம் முடிவடைகிறது.

'பக்குவப்பதம்' என்ற பட்டிணத்தில் எட்டாவது மாசிகபிண்டத்தை அந்த, ஜீவன் சாப்பிடுகிறது. ஒன்பதாவது பிண்டத்தை ஏற்கும் இடம் 'துக்கதம். 'நாதாக்கிராந்தம்' என்ற பட்டினத்தில் 10—வது பிண்டத்தை உண்கிறது. காளைக்கன்றை மந்திர விதிப்படி தானம் செய்யாத ஜீவன்கள் அங்கே கூட்டம் கூட்டமாய் கூச்சலிட்டுத் திரியும். 'அதப்தம்' என்ற ஊரில் 11—வது மாசிக பிண்டத்தை ஏற்கிறது. உடலை உறைய வைக்கும் குளிரையுடைய 'சீதாப்ரம்' என்ற நகரத்தில் 12—வது பிண்டத்தை ஜீவன் உண்கிறது.

கம்பளி, படுக்கை தானம் செய்யாதவர்களை குளிர் புரட்டிப்போட்டு விடும். அங்கிருந்து புறப்பட்ட ஜீவன் பலவாறு புலம்பியபடி வைவஸ்தப் பட்டிணத்திற்கு (யமபுரி) வந்து சேர்கிறது.

## 6. பன்னிரண்டு சிரவணர்கள்

அங்கே 12 சிரவணர்கள் இருப்பார்கள். அவர்களை ஆராதித்தி ருந்தால் அவர்கள் ஜீவனின் மற்ற பாபங்கள் வெளிப்படாதபடி புண்ணிய செயல்களை யமதர்மனிடம் எடுத்துரைப்பார்கள்" என்றார் புருஷோத்தமன்.

"ஐயனே! பன்னிரு சிரவணர்கள் யார்? அவர்கள் ஏன் யமபட்டணத்தில் வசிக்க வேண்டும்? அவர்கள் எவ்வாறு மனிதர்கள் செய்யும் பாப புண்ணியங்களை அறிகிறார்கள்" என்று கேட்டார்.

"சுபர்ணா! பிரளய வெள்ளத்தில் நான் (ஸ்ரீமகாவிஷ்ணு) யோக நித்திரையில் ஆழ்ந்திருந்தேன். எனது நாபிக்கமலத்திலிருந்து பிரம்ம தேவன் தோன்றி, என்னைக் குறித்துத் தவமிருந்தான். வேதங்களையும், மற்ற உயிர்களையும் படைக்கும் ஆற்றலைப் பெற்றான். அஷ்ட திக்பாலர் களும், ருத்திரனும் அவரவர் தொழிலைச் செய்தனர்.

யமதர்மன் ஜைமினி நகரத்தை அடைந்து உயிர்கள் செய்யும் பாப, புண்ணியத்திற்கேற்ப நீதி வழங்க நியமிக்கப்பட்டான். அவனால் தனியாக எதையும் கண்டறிய முடியவில்லை!

நான்முகனிடம் சென்று "உதவிக்கு ஆள் வேண்டு"மென விண்ணப்பித்தான். சதுர்முகன் ஒரு தர்ப்பையை எறிய அதிலிருந்து உண்டானவர்களே இந்தப் பன்னிரண்டு சிரவணர்கள்.

"தர்மராஜனே! இவர்கள் பிறந்து அழியும் எல்லா ஜீவன்களின் பாப, புண்ணியங்களை அறியும் வல்லமை பெற்றவர்கள். இவர்களின் துணையோடு பாவிகளை தண்டித்து, புண்ணியவான்களை ரட்சிப்பாயாக" என்று அருளினார். அதன்படியே யுகங்கள் தோறும் நடந்து வருகின்றது.

தருமவான்கள் தேவவிமானத்தில் நொடியில் யம லோகம் சென்று விடுவர். பன்னிரெண்டு கும்பங்களில் ஆசாரமாக அன்னம் தயாரித்து 12 வேதமோதும் ஒழுக்கமுடைய அந்தணர்களை 12 சிரவணர்களாக வரித்து, பூஜித்துத்தானம் செய்தால் அவர்கள் யமபுரியில் அனைத்து நன்மை களையும் செய்வார்கள். இவர்களின் வரலாற்றைப் பக்தியுடன் கேட்டாலே பாபம் நீங்கிவிடும். மடிந்தவர்களின் சந்ததியினர் அன்னதானம் செய்தால் பயணமார்க்கத்தில் பசியினால் ஜீவனுக்கு அவஸ்தையில்லை! ஜல பாத்திரம் தானம் கொடுத்தால் தாகத்தால், ஆத்மா தவிக்காது. தீபதானம் செய்வதால் இருள் நிறைந்த வனத்தில் செல்லும் போது ஒளி தெரியும்.

கார்த்திகை மாத வளர்பிறை சதுர்தசியில் தீபதானமோ, காளைக் கன்று தானமோ செய்யப்பட்டால் ஜீவனுக்கு நற்கதி கிடைக்கும். உடலை விட்ட உயிர், தான் வாழ்ந்த இல்லத்தில் தனக்கு நெருங்கியவர் முன் சதா அழுது கொண்டிருக்கும். தினமும் அதற்கு அன்புடன் பிண்டம் சமர்ப்பிக்க வேண்டும். 11 அல்லது 12வது நாளில் அந்த ஜீவனின் நலத்துக்காகத் தானங்கள் செய்ய வேண்டும். இதனால் கிங்கரர்கள் ஜீவனைத் துன்புறுத்தாமலிருப்பார்கள்.

மேலேயிருந்து விழும் இரத்தமழையால் நனையாமலிருக்க குடையும், பாதங்களில் கல்லும், முள்ளும் குத்தாமலிருக்க செருப்பும் தானம் செய்ய வேண்டும். அன்போடு பிண்டம் சமைத்தால் பிண்ட சரீரம் நன்றாக அமையும். பூதானம் செய்தால் ஜீவன்கள் சொர்க்கத்தில் சொகுசாக வாழ்வார்கள்.''

''பத்தானம் என்றால் என்ன?'' என்று கேட்டார் கருடர். ''கருடா! கொளுத்தும் வெய்யில் வாட்டாதிருக்கக் குடை, கால்கள் தள்ளாடும் நேரத்தில் ஊன்றிக் கொள்ளத் தடி, மானம் காக்க வஸ்திரம், கிங்கரர் களுக்காக மோதிரம், களைப்பாயிருக்கையில் பூச்சியும், சகதிகளும் நிறைந்த இடத்திலும், இளைப்பாற ஆசனப்பலகை, கும்ப ஜலம், அன்னம், பூணூல், அன்னம் போதாதபோது சமைத்துக் கொள்ள அரிசி, தாமிரச்செம்பு போன்றவற்றைத்தானம் செய்வது 'பத்தானம்' எனப்படுகிறது.

பன்னிரண்டு நாட்களும், அல்லது சேர்த்தோ பன்னிரண்டு உதககும்பம் (தண்ணீர் குடம்) தானம் செய்தால், கிங்கரர்கள் திருப்தியடைந்து, ஜீவனைக் கஷ்டப்படுத்தாமல் யமபுரிக்கு அழைத்துச் செல்வார்கள். மாத சிரார்ததம், வருட சிரார்த்தம் இவைகளால் ஜீவர்களோடு காலதூதர்களும் சந்தோஷப் படுகின்றனர்.''

''ஜெகன்னாதா! பிண்ட சரீரம் வேறு, கட்டை விரல் அளவுள்ள வாயு சரீரம் வேறா என்பதை விளங்கச் சொல்ல வேண்டும்'' என்று விநயமாகக் கேட்டார் வைநதேயர்.

''இறந்தவுடன் அனைவரும் பெறுவது கட்டை விரல் அளவுள்ள வாயு சரீரம். பிண்டம் கொடுத்தால் மட்டுமே கிடைப்பது பிண்டசரீரம். கட்டை விரல் அளவுள்ள உடல் ஒரு வன்னி மரத்தில் சிலகாலம் தங்கியிருக்கின்றது. அதன்பிறகு கர்மத்தாலான தேகத்தைப் பெறுகின்றது. பிண்ட சரீரத்தோடு அது இணையும்.

பன்னிரு சிரவணர்கள் சொல்ல, நித்தமும், 'சித்திரகுப்தன்' கணக் கெழுதிக் கொண்டிருக்கிறான். ஜீவர்களின் பாப புண்ணியக்கணக்கு அவனால் படிக்கப்படும். தண்டனைகளை யமதர்மன் வகுப்பான்.

## 7. நரக தண்டனைகள்!

ஒரு உயிர், சொற்களால் செய்த பாபத்திற்கு வட்டி போட்டு, கிங்கரர்கள் திட்டித் தீர்த்து விடுவர். சரீரத்தால் பாபம் செய்திருந்தால் பழுக்கக் காய்ச்சிய எண்ணைக் கொப்பரையில் வறுத்தெடுப்பார்கள். செக்கச் சிவந்த உருக்கிய செப்புத்தூணைக் கட்டிக் கொள்ளச் சொல்லி அடிப்பார்கள். இது காமாந்தக்காரர்களுக்கான தண்டனை!

மனதால் பாபம் செய்தவர்கள், இம்மாதிரி தண்டனை அனுபவிப்பர்களைப் பார்ப்பதே தண்டனை. கண்கள்தான் இமைக்க முடியாதே!

"கச்யப குமாரனே! மொத்தம் 84,00,000 நரகங்கள் உள்ளன. அதில் 28 வகை கொடிய நரகங்களை சொல்கிறேன்.



**1. தாமீஸ்ரம் :**

பிறர் பொரு – ளையும், மாற்றான் மனைவியையும் அனுபவிப்பவர்களும், பிறர் குழந்தையைத் திருடுபவர்களும், காலபாசத்தால் கட்டப்பட்டு இந்த நரகத்தில் தள்ளி அடிக்கப் படுவார்கள். மயக்கத்தைத் தெளிவித்து மறுபடி மிரட்டி விளாசுவார்கள்.

## உ. அந்த தாமிஸ்வரம் :

கணவனை வஞ்சித்த மனைவி, மனைவியை வஞ்சித்த புருஷன், இவர்களைத் தள்ளும் நரகம் இது. பழுக்கக் காய்ச்சிய இரும்புக்கம்பியால் இருகண்களையும் குருடாக்கித் தள்ளப்படுவதால் 'அந்த தாமிஸ்வரம்' என்று பெயர் பெற்றது.



### 3. ரௌரவம் :

பொய் வழக்காடுபவர்கள், பொய் சாட்சி சொல்பவர்கள், அக்கிரமச் செயல்களைச் செய்து, பிற குடும்பங்களை அழிக்கிறவர்கள் இங்கே தள்ளப்படுகிறார்கள். ஏமாறியவர்கள் 'ருரு' என்ற மிருக வடிவைப் பெறுகிறார்கள். ஏமாறியவர்களின் மனவருத்தம் கண்ணீராக 'ருரு'விடம் சேர்ந்திருக்கும். 'ருரு' அங்கு விழுபவர்களை பயங்கரமாக இம்சிக்கும்.

### 4. மகா ரௌரவம்:

பலரையும் ஏமாற்றித் திண்டாட விட்டவர்களை பல ருருக்கள் கொத்திக் கொண்டிருப்பதால் இதை மகா ரௌரவம் என்பார்கள்.

### 5. கும்பீபாகம்:



பறவைகள், பசு, மான், முயல் போன்ற வற்றை, நாக்கு ருசிக் காகக் கொல்பவர், சித்திரவதை செய்பவர்கள் தள்ளப்படும் நரகம் இது. இங்கே எண்ணைக் கொப்பரை எப்போதும் கொதித்துக் கொண்டிருக்கும். அதில் பாவி பாகமாவான்.

## 6. கால சூத்திரம் :

பெற்றவர்களைக் காப்பாற்றாமல் விரட்டி விடுபவர்களை, மகான்களைத் துன்புறுத்துகிறவர்களை, இங்கே தள்ளுகிறார்கள். இங்கே அனல் போல் சூரியன் தகிப்பான். நெருப்பு எரிந்து கொண்டிருக்கும். சரீர எரிச்சல் தாளாமல் நாஉலர்ந்து போகும். பசி வாட்டும். ஜீவன் ஓடும், புரளும், குதிக்கும், மூர்ச்சையாய் விழும்.



## 7. அசிபத்திரம் (வாளலகு)

தன்னுடைய குல தெய்வத்தை நிந்தித்தும், தான் செய்யவேண்டிய தர்மங்களை விடுத்தும், வாழ்ந்த, அதர்மிகளைத் தள்ளும் நரகமிது. சிறியதும், பெரியதுமான பாறைக் கற்கள் நிறைந்த மேடுபள்ளமான இடம். கத்தியைப் போன்ற ஒருவகை இலைகளால் செய்யப்பட்ட சாட்டையால் பாவிகள் அடிபட்டு அங்குமிங்கும் ஓடும்போது கற்களில் இடறிக்கீழே விழுந்து கற்கள் ரணத்தில் குத்தி மயக்கமடைவர்.



## 8. பன்றிமுகம்:

லஞ்சம் வாங்கிக்கொண்டு அநியாயமாய் தீர்ப்பெழுதி, அகந்தையோடு திரிபவர் புகும் நரகமிது. அப்பாவிகளுக்கு எதிராக வாதாடும் வழக்கறிஞர்களும், இங்கே தள்ளப்படுகிறார்கள். இது பன்றி முகம்போல் அமைந்திருக்கும். இங்கே காலதூதர்கள் கை, கால்களை விறகு சுள்ளி முறிப்பது போல் ஒடிப்பார்கள். பிறகு அவற்றை ஆலையிலிட்டு நெருக்குவார்கள்.

## 9. அந்த கூபம்: (பாழுங்கிணறு)

கொலை பாதகம் செய்பவர்களைத் தள்ளும் கிணறு இது. இதில் ஒருபக்கம் கூர்மையான கொம்புகளையுடைய மாடுகள் முட்டும். கழுகும், இராஜாளியும் இரத்தம் சொட்டும் தசைகளைக் கொத்தித் தின்னும். கொசுக்களும், மூட்டைப் பூச்சிகளும் உதிரம் உறிஞ்சும். தேளும், பாம்பும் ஒருபுறம் கடித்துக் கொண்டிருக்கும். கொலையானவர் மேனியில் எத்தனை மயிர்கள்(உரோமங்கள்) இருந்தனவோ அத்தனை ஆண்டுகள் கொலையாளி அந்தக் கிணறை விட்டு வெளியே வரமுடியாது.

## 10. கிருமி போஜனம்:

இது லக்ஷம் யோஜனை பரப்பளவைக்கொண்டது. சுயநலமாய் தான் மட்டுமே உண்டு, விருந்தினரைப் புறக்கணித்தவர்கள், பிறரைக் கிருமிகள் போல் துளைத்தெடுத்தவர்கள், தெய்வ நிந்தனை செய்வோர் இங்கு தள்ளப்படுகிறார்கள். இங்கே விழுந்ததும், அவர்கள் புழுவாகி விடுவார்கள். பெரிய புழுக்களால் ஹிம்சிக்கப்படுகிறார்கள்.



## 11. அக்னிகுண்டம் :

கொள்ளையடிப்பவர்கள், திருடர்களுக்கான நரக குண்டம் இது. பாவிகளை நீண்ட எஃகுத் துடுப்பினால் அக்கினி குண்டத்தில் தள்ளி வாட்டி வதக்கிக் காய்ச்சப்படுகிறார்கள்.





**12. வஜ்ரகண்டகம்:**

பழுக்கக் காய்ச்சப்பட்டு எந்நேரமும் சிவந்து காணப்படும் இரும்புத் தூண்கள். சோரம் போன மனைவியையும், எந்நேரமும் தாசி வீடே கதியாய் கிடந்த புருஷனையும், அந்தத் தூணைக் கட்டிக் கொள்ளச் சொல்லி சாட்டையால் அடிப்பார்கள் கிங்கரர்கள். அவர்கள் பாபம் தீரும் வரை கையை எடுக்க முடியாதபடி தூண் ஒட்டிக் கொண்டிருக்கும்.

**13. சான்மலி:**

நன்மை, தீமை, உயர்வு, தாழ்வு எதையும் பாராமல் தரம் கெட்ட நிலையில் எவருடனும் கூடிக் களிக்கும் மோகாந்தக் காரர்கள் முட்களாலான ஆயுதத்தால் கொத்தி எடுப்பார்கள்.



### 14. வைதரணி:

இந்த உதிர ஆற்றில் முதலைகள், பாம்புகள், அட்டைகள், எலும்புகள், சதைத்துணுக்குகள், மலம், மூத்திரம் அனைத்தும் கலந்திருக்கும். வாழ்க்கை நெறி பிறழ்ந்தவர்கள், இதில் தள்ளப்பட்டு, திமிங்கிலம் விழுங்கினாலும் சாகமாட்டாமல் வெளிப்படுவர். சரீரம் புண்ணாகி சீழ்பிடித்து அவஸ்தைப்பட்டுத்துடிப் பார்கள். 'ஆ' என்றலறினால் வாய்க்குள் தலைமுடி சிக்கிக்கொள்ளும்.



### 15. பூயோதம் :

ராட்சதவடிவில் நண்டு, தவளை, அரணை போன்றவை நிறைந்திருக்கும் இந்த சிறுநீர் நிறைந்த குட்டையில் தள்ளப்படும் பாவிகள் ஒருவரை ஒருவர் அடித்துக் கொள்கிறார்கள். வெட்கம், நாணம் விட்டு, ஊர் தூற்ற வாழ்பவர்கள், உழலும் நரகத்திலிருந்து, கரையேற முயலும் ஆவிகள் கோழை(சளி)களில் வழுக்கி மறுபடியும் அதிலேயே விழுகிறார்கள்.

## 16. பிராண ரோதம்:

நாய், கழுதை, காளை போன்ற மிருகங்களை வளர்த்து, அவற்றால் முடிந்தவரை சம்பாதித்து, அவற்றினை சரியாகப் பாதுகாக்காமல் அடித்து, உதைத்து, பயனில்லை என்று தெரிந்தும் விரட்டி விடும் பாவிகளை, இங்கே தள்ளி தொடர்ந்து அம்புகளை எய்து துன்புறுத்துகிறார்கள். மான், முயல் போன்றவற்றை வேட்டையாடுபவர்களும் இங்கே தள்ளப்படுகிறார்கள்.



### 17. விசஸனம் :

ஆடம்பரத்திற்காக பசுக்களைக் கொன்று யாகங்கள் நடத்துபவர்கள் இங்கே தள்ளப்பட்டு கொடூரமான முள்சாட்டையால் அடிக்கப்படுகிறார்கள்.

### 18. லாலாபட்சம் :

தன்னுடைய மனைவியைத் துன்புறுத்தி, விபரீதமான மோக இச்சைக்கு ஆளாக்குகின்றவர் இந்த இந்திரிய நரகத்தில் உழல்வார்கள்.

### 19. சாரமேயாதனம்:

வீடுகளைக் கொளுத்துவது, சொத்துக்களை சூறையாடுவது, நயவஞ்சகமாய் விஷம் கொடுப்பது, பொறாமையால் அவலட்சணப் படுத்துவது போன்ற பாவச் செயல் செய்பவர்களை இந்த நரகத்தில் தள்ளி, நாய் இறைச்சியை உண்ணக்கொடுப்பார்கள். எழுநூறு வேட்டை நாய்கள் பாவிகளைக் கடித்துக்குதறும் அவலமான நரகம் இது.



## 20. அவீசீ:

தற்பெருமை கொண்டவர்கள், உணவை வீணாக்குகிறவர்கள், செருக்குற்றவர்கள், இந்த மலையின் உச்சியிலிருந்து கீழே தள்ளப்படு கிறார்கள். அங்கங்கள் வேறு வேறாய் சிதற, கிங்கரர்கள் ஒன்று சேர்த்து மீண்டும் அவீசி மலையிலிருந்து வீசுவார்கள்.

## 21. பரிபாதனம் :

மதுவை வற்புறுத்திக் குடிக்க வைப்பவர்கள், குடிகாரர்கள், போதைப்பொருட்களைப் பயன்படுத்துபவர்கள், இந்த நரகத்தில் நெருப்பில் காய்ச்சி உருக்கிய எஃகிரும்பை சாட்டை அடிக்கு பயந்து குவளை குவளையாகக் குடித்துக் கொண்டிருப்பார்கள்.

## 22. க்ஷார கர்ததமம் :

அகம்பாவத்தால் தலைகனம் கொண்டு சான்றோர்களை மதிக்காமல் திரிபவர், இந்த நரகத்தில் தலை கீழாகக் கட்டித் தொங்க விடப்பட்டு உடலில் பூரான், மரவட்டை, வண்டு, தேனி, அட்டை போன்றவற்றை ஊற விடுகின்றனர்.



### 23. ரக்ஷோகணம் :

நரபலி கொடுத்து யாகம் நடத்துவோரும், நர மாமிசம் சாப்பிடுவோரும், பிதுர்கடன் கழிக்காதவரும், சிசுஹத்தி செய்பவர்களும், இங்கு துண்டு துண்டாக அறுக்கப்படுகிறார்கள். அறுப்பவர்கள் அவர்களால் பாதிக்கப்பட்டவர்களே!

### 24. சூலப்ரோதம் :

நயவஞ்சகமாய் அப்பாவிகளைக் கொல்லுதல், தனக்கு எந்தக் கெடுதலும் செய்யாத நல்லவர்களைப் பொருளுக்காக வதைத்தல், தற்கொலை செய்து கொள்ளுதல், இவற்றை மேற்கொண்ட பாவிகள் இந்த நரகத்தில் சூலத்தால் குத்தப்படுகிறார்கள். சூலம் குத்திய ரணங்களில் கழுகு, கொக்கு முதலான பறவைகள் கொத்தும்.



### 25. தந்த சூகம்:

கலப்படப் பொருட்களால் லாபம் காண்பவர், பணிக்கு உரிய ஊதியம் கொடுக்காமல் மோசம் செய்பவர், இவர்களையெல்லாம் ஐந்து முகம் கொண்ட கடுவாய் விரட்ட, ஏழுதலை நாகம், பாம்பரணை, தேள் முதலானவை கொத்திக் குதறும்.

## 26. வடாரோதம் :

குகைகளிலும், மரப் பொந்துகளிலும், வளைகளிலும் வாழும் பிராணிகளை கொடூரமாகத் துன்புறுத்துபவர் நச்சுப் புகை சூழ்ந்த இந்த மலைக்குகையில் சுற்றிலும் தீ தகிக்க அவதிப்படுவார்கள். பில்லி, சூனியம் வைப்பவர்களுக்கும் இங்கே இடமுண்டு.

## 27. பர்யா வர்த்தனகம்:

அதிதிகள் மனம் நோகும்படி நிந்தித்தவர்களும், சமித்துக்களைத் தவறாகப் பயன்படுத்துகின்றவர்களும், தண்ணீரை அசுத்தப்படுத்து பவர்களும் இந்த நரகத்தில் உழல்கிறார்கள். அவர்கள் கண்களை காகம், பருந்து முதலானவை கொத்திக் குருடாக்குகின்றன. நகக்கண்களில் ஊசி ஏற்றப்படுகின்றன.

## 28. சூசிமுகம் :

கடன் வாங்கி விட்டுத் திருப்பிக் கொடுக்காதவர்கள், பணத்தைப் புதைத்து வைத்து மகிழ்கின்றவர்கள், அநியாயமாக சொத்து சேர்த்தவர்கள் இவர்களின் நாக்கை 'சந்தமிசினி' என்ற ஆயுதத்தால் பிடுங்கி நாற்புறமும் கூர்மையான கத்திகளை நாட்டி நடக்க வைக்கும் நரகமிது.

இதுதவிர க்ஷார(உப்பு)குண்டத்தில் உடலை அறுத்து, அறுத்துக் காய்ச்சி உப்பிடும் தண்டனை, உணவுப் பொருட்களை விரயம் செய்வோருக்குத் தரப்படும்.

அஸ்ரு (கண்ணீர்) குண்டத்தில் மற்றவரை அநியாயமாகக் கண்ணீர் சிந்தவைபவர் அமிழ்த்தப்படுவர். பரிதாபப்பட்டவர்களின் கண்ணீரால் நிரம்பியிருக்கும் நரகம் அது.

இடித்து இடித்துப் பேசுபவரை உலக்கைக் குண்டத்தில் தள்ளுகிறார்கள். அங்கே உலக்கை விடாமல் இடிக்கும்.

சோம்பேறிகளைத் தள்ளும் இடம் 'கூர்ம குண்டம்.' உடலே தெரியாத அளவு ஆமைகள் மொய்த்துக் கொள்ளும் அவஸ்தை உண்டு. சக்கரத்தில் ஏற்றி ஓயாமல் சுற்ற வைப்பது 'சக்கர குண்டம்.' மற்றவர்கள் சொல்லும் அறிவுரைகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் அலட்சியப்படுத்து பவர்களுக்காக ஏற்பட்டது 'கர்ணவிஷ (செவிக்குரும்பி) குண்டம்.' கொழுப்பெடுத்து அலைபவர்களுக்கு மஞ்ஞா (கொழுப்பு) குண்டம். தன்

ஆத்திரத்தால் எதிரியின் வீட்டை, விளைந்த பயிரை, பொது உடைமைகளை எரிப்பவர்களுக்கு 'வன்னி (நெருப்பு) குண்டம்.' பிடிக்காதவர்களுக்கு நஞ்சூட்டுபவர்களுக்கு'(விஷகுண்டம்)', கோள் சொல்பவர்களுக்கு (தூஷிகா குண்டம்)

அப்பாவி உயிர்களைக் கொல்பவர்களுக்கு 'சரக்குண்டம்.' பித்ரு கர்மாவைப் புறக்கணித்தவர்களுக்கு 'காக குண்டம்.' காக்கைகள் அங்கே உடலைக் கொத்திக் கொத்தி புண்ணாக்கும். பிறரை எந்த விதத்திலாவது இம்சிப்பவர்களுக்கு 'தப்த சூரிக்குண்டம்.' அங்கே நெருப்பிலிட்ட ஊசியால் குத்துவார்கள்.

தன் கடமை, கர்மத்தில் பற்றுள்ளவர்களும், புண்ணியசாலிகளும், சித்தர்களும், யோகிகளும், குரூரமான யமகிங்கரர் கண்களில் தென்பட மாட்டார்கள்.

28 வகை நரகங்களும் ஒவ்வொரு வகையிலும் ஏராளமான கொடிய பிரிவுகளைக் கொண்டதாகும். இவைகளில் உழலாமல் இருக்க நேர்மையாய் பொருளீட்டி, ஒழுக்கமாய் வாழவேண்டும். புண்ணிய காரியங்களாலும், உபகார சிந்தையாலும், பிதுர்க்கடமையைத் தவறாமல் செய்வதாலும், மறுபிறவி கௌரவமுள்ளதாக அமையும்.

* * *

## 8. யமபுரியில் உபசாரம்!

வைநதேயா! இறந்தவருக்காக உப்பு, பருத்தி, எள், பாத்திரம் ஆகிய வற்றை சந்ததியினர் தானம் செய்திருந்தால் யமபுரி கர்ம சரீரத்துக்கு அழகாய் காணப்படும்.

மடிந்தவருக்காக கோதுமை, கடலை, எள், கொள்ளு, மொச்சை, துவரை, பயறு முதலான ஏழுவகை தானியங்களை பாத்திரங்களோடு வம்சாவளி யினர் தானம் செய்திருந்தால், சதாகாலமும் யமனின் அருகிலேயே இருக்கும் தர்மத்துவஜன் என்பவன் திருப்தியடைந்து அந்த ஜீவனைப் பற்றி நல்ல விதமாக யமனிடம் எடுத்துரைப்பான்.

வன்னி மரத்தை விட்டு இருபது காத வழி போகையில் நல்ல வரவேற்பு கிடைக்கும்.

பாவிகள் கண்களுக்கு பயங்கரமாக சிவப்பேறிய, பச்சை நிறக்கண்

களோடு தென்படும் யமன் புண்ணியசாலிகளுக்கு கம்பீரமானவனாகத் தெரிவான்.

புண்ணிய ஜீவன் சூரிய மண்டல வழியில் சத்தியலோகத்துக்குச் செல்லும் வரை யமன் கூட வந்து வழியனுப்புவான். புண்ணிய ஜீவன்கள் தன் சபையில் பிரவேசித்ததும் எழுந்து நின்று முகமன் கூறுவான் யமதர்மன். யமகிங்கர்களும் இருமருங்கிலும் நின்று வரவேற்பர்.

இதில் அதிக புண்ணியசாலி சொர்க்கம் சென்று விடுவான். நரகத்தில் உழல்பவனுக்கு சீக்கிரத்தில் மானிடப் பிறவி வாய்க்காது. பாப—புண்ணியம் இரண்டும் கலந்து செய்தவர்களுக்கு செய்த விகிதாசாரப்படி ஜென்மம் வாய்க்கிறது.

அறிவு, அழகு, செல்வம், புகழ், ஆரோக்கியம் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகை புண்ணியத்தினால் அமைகிறது. அங்கஹீனமின்றிப் பிறப்பது புண்ணிய பலனே!

* * *

"மாதவா! பிரேத ஜன்மம் யாருக்குக் கிடைக்கிறது? அதிலிருந்து எப்படி விடுதலை பெறுவது என்பதையும் கூறியருள வேண்டும்" என்று கேட்டார் சுபர்ணன்.

"கருடா! பிறர் உடைமையை அபகரித்தவர் பிரேத சரீரம் அடைகிறார். இறந்த பிறகு சொத்துக்களைப் பறித்துக் கொள்ளும் பாபிக்கும் இந்த நிலைதான்!

பிரேத ஜன்மம் எடுத்தவர் பசி, தாகத்தோடு தான் வாழ்ந்த வீட்டையே சுற்றி அலைகிறார். சிரார்த்த நாளில் பிதுருக்களை இல்லத்தினுள் நுழைய விடாமல் தடுத்து நிறுத்துவார். பிதுருக்களுக்கான ஹவிசுகளை தானே புசிப்பார்.

வீட்டிலுள்ள பொருட்களை குடும்பத்தினர் அனுபவிக்க முடியாதபடி செய்வார். தானம் செய்யவும் விடமாட்டார். அதனால் அந்தக் குடும்பத்தினர் துன்பத்தையே தொடர்ந்து அனுபவிப்பர்.

வம்சம் நாசமடையும்படி செய்யும் வல்லமையும் அவருக்குண்டு.

முன்பே பேரன், பேத்திகள் ஏற்பட்டிருந்தால் அவர்கள் கொடிய நோயால் அகால மரணமடைவர்.

“தானதருமங்கள் செய்தவரையும், பிதுர் கடமைகளை நிறைவேற்றிய வரையும், அடியார்களை ஆதரிப்போரையும், மது, மாமிசம் சாப்பிடாதவரையும், தெய்வ பக்தியோடிருப்பவரையும் இந்த பிரேத ஜன்மங்களால் எதையும் செய்ய முடியாது.

குழந்தைகள் பிறந்து, பிறந்து, இறந்து போவதற்கும், ஆண் வாரிசு இல்லாமல் போவதற்கும், சுற்றத்தாரோடு ஒற்றுமையின்றி சண்டை போடுவதற்கும் இவர்களே காரணம்!

நண்பன் பகைவனாவதும், நல்லவர்களை நிந்தனை செய்வதும், பெற்றோரைப் புறக்கணிப்பதும், கொலை,கொள்ளை போன்ற கொடிய செயல்கள் செய்வதும் பயிர்கள் சாவியாகப் போவதும், விளைந்த தானியத்தைக் களவு கொடுப்பதும், இழிவான காரியங்களால் பிழைப்பு நடத்துவதும், தேஜஸ் குறைவதும், பிள்ளை விரோதியாவதும், வாழ்க்கைத்துணையைப் பிரிந்து வாழ்வதும் பிரேத ஜன்மமாகத் திரிபவன் செயலே.

துன்பங்களும், துக்கங்களும் சூழ்ந்த குடும்பத்தினர் பிரேத ஜன்மத்தைக் கரையேற்ற நடவடிக்கை எடுக்க வேண்டும்.

பிரேத ஜென்மத்தை எடுத்தவன் கொடூரமான முகத்தோடு இருப்பான். பற்கள் நீண்டு வாள் போலிருக்கும். அவன் சுற்றத்தினர் சொப்பனத்தில் தோன்றி ஓலமிடுவான்; பயமுறுத்துவான்.

வழிப்போக்கர் நலனுக்காக, கால் நடைகள் தாகம் தீர்க்க வெட்டப்பட்ட குளத்தைத் தூர்ப்பவர், அன்ன சத்திரத்தை இடித்து விட்டு வீடுகட்டுபவர் அல்லது சத்திரத்தை விற்பவர், கோயில்களை இடிப்பவர், கோயில் சொத்தை ஏப்பமிடுகிறவர், கிராம வயல்களின் எல்லைகளை அடாவடியாக அதிகரிப்பவர், ஏரிகளைத் தூர்த்து விற்பவர் அல்லது அதில் கட்டடம் கட்டுபவர், இடி விழுந்து மரணமடைந்தவர், தற்கொலை செய்து கொண்டவர், தவறாகத் தீர்ப்பு வழங்குபவரும், மாடுகளை ஹிம்சிப்பவரும் பிரேத ஜன்மாவைக் கண்டிப்பாக அடைவார்கள்.

* * *

# 9. பிரேத ஜன்மம் நீங்குவதற்கான பரிகாரம்

“ஸ்வாமி! பிரேத ஜென்மம் தொலைய என்ன செய்யவேண்டும் என்பதையும் விளக்கிக் கூற வேண்டும்” என்று கருட பகவான் கேட்டார்.

“மாமரம், தென்னைமரம், அரசமரம் போன்ற பயன்தரும் மரங்களை நட்டு வளர்க்க வேண்டும்”. மணம் தரும், பூஜைக்கான தாவரங்களை வளர்த்து பூஜை செய்பவருக்கு மலர்களைத் தானம் செய்ய வேண்டும். ஆவினங்களின் பசியைப் போக்க புல் வளர்க்க வேண்டும். குளம், கிணறு போன்றவற்றை உண்டாக்கலாம். பழைய நீர் நிலைகளைத் தூர் வாரலாம். புண்ணிய தீர்த்தங்களில் நீராடி தான, ஹோமங்களைச் செய்யலாம்.

இதனால் பிரேத ஜன்மம் எடுத்தவரின் உறவினர்களுக்குக் கஷ்டங்கள் நீங்கும். துர்க்கனவுகளை அலட்சியம் செய்யாமல் சுற்றத்தினரிடம் கூறி நிவர்த்தி தேட வேண்டும். சான்றோர்கள் கூறும் தர்ம வழிகளை சத்தியமாகக் கொள்ள வேண்டும். நாமபாராயணமும் நல்வழியைக் காட்டும்.

கிரகணம், பௌர்ணமி, அமாவாசை, மாதப்பிறப்பு, மஹாளயம் போன்ற புண்ணிய காலங்களில் பிதுருக்களை நினைத்துத் தர்ப்பணம் செய்ய வேண்டும். இதனால் அவர்களுக்கு பூத, பிரேத, பைசாசங்களால் துன்பங்கள் ஏற்படாது.

பெற்றோரையும், குருவையும் எந்த சமயத்திலும் நிந்திக்கவோ, புறக்கணிக்கவோ கூடாது. அவர்களே முதல் தெய்வம். தாய், தந்தையரைப் பேணுகின்றவர், க்ஷேத்திராடனம் செய்யாமல் போனாலும் அது குற்றமாகாது. அன்னை, தந்தை மனதை நோகடிப்பவர் செய்யும் பூஜைகளும், தான தர்மங்களும், தீர்த்த யாத்திரைகளும் பயனற்றுப் போகும். பெற்றோர் மரித்த பிறகு பன்னிரண்டு நாட்களும், திதி காலத்திலும் செய்யும் தான தருமங்கள் செய்பவருக்கு நன்மையைக் கொடுக்கும்.

‘புத்’ என்ற நரகத்திலிருந்து பெற்றோரைக் கரையேற்றுவதாலேயே பிள்ளைக்குப் புத்திரன் என்ற பெயர் உண்டாயிற்று.

விபத்து மூலம் மாண்டவருக்கும், தற்கொலை செய்து கொண்டவருக்கும் நிச்சயம் பிரேத ஜென்மம் வாய்க்கும். அவர்களுக்கு ஒரு வருடம் வரை எந்த கர்மாவும் நடத்தக் கூடாது. ஒரு ஆண்டு கழித்து சிரார்த்தம் நடந்தபின் இறந்த வருடைய பிரேத ஜென்மதோஷம் நீங்குவதற்கான கிரியைகளைச் செய்ய வேண்டும்.

இது சம்பந்தமாக ஒரு வரலாற்றினைச் சொல்கிறேன். கேள். திரேதாயுகத்தில் மஹோதயம் என்ற பட்டணத்தைத் தலைநகராகக் கொண்டு பப்ருவாகனன் என்ற அரசன் ஆட்சி நடத்தி வந்தான். ஒருநாள் படைவீரர்களோடு அவன் காட்டிற்கு வேட்டையாடச் சென்றான்.



ஒருபுள்ளி மான் கண்ணைக் கவர்ந்தது. அம்பு எய்தினான். ஆனால் அந்த பாணம் அதன் உயிரைக் கவரவில்லை. அரைகுறையாய் பட்ட காயத் தோடு இரத்தம் சிந்தியபடி மான் வனத்துக்குள் மறைந்து விட்டது. உதிரச் சுவட்டைப் பின்பற்றி சென்ற மன்னன் நெடுந்தூரம் நடந்து இன்னொரு காட்டை அடைந்தான். மான் தென்படவில்லை.

வேந்தன் களைப்புற்றான். தாகம் நாவை வறட்டியது. தேடியலைந்து ஒரு தாமரைத் தடாகத்தைக் கண்டான். தாகம் தீர நீரை அள்ளிப்பருகினான். பிறகு உடல் வெப்பம் தீரக்குளித்தான். அருகிலிருந்த ஒரு ஆலமர நிழலில் இளைப்பாறினான். அவனுடன் வந்தவர்களுக்காகக் காத்திருந்தான். சூரியன் மலைவாயிலில் மறைந்தான்.

பரிவாரத்தினர் ஒருபக்கம் தேடிக் கொண்டிருந்தனர். இருள் கவிந்தது. அடர்ந்த மரங்கள் நிறைந்த காடாயிற்றே! பிரேத உருவத்துக்கு எலும்பும், சதையும், நரம்புகளும் ஏது? பல பிரேதங்கள் அங்குமிங்கும் "பசிக்கிறதே! தாகம் தாங்க முடியவில்லையே! என்னைக் கவனிப்பாரில்லையே!" என்று கத்திக் கொண்டே அலைவதைக் கண்டான் பப்ரு வாகனன்.

அவனுக்கு இதெல்லாம் பயமாகவும் இருந்தது, அதிர்ச்சியையும் தந்தது. தலைமையாய் தெரிந்த ஒரு பிரேதத்திடம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு "நீ யார்? உனக்கு இந்த நிலை ஏற்படக்காரணம் என்ன?" என்று கேட்டான் வேந்தன்.

"மன்னா! நான் வைதீச நகரில் வைசிக குலத்தில் பிறந்தவன். விவாகம் செய்து கொண்டு சந்தோஷமாக வாழ்ந்தேன். எல்லா விரதங்களையும் கடைபிடித்தேன். தவறாமல் தெய்வ ஆராதனை செய்தேன். மகான்களின் ஆசி பெற்றேன். ஈ, எறும்புக்குக் கூடத் தீமை புரிந்ததில்லை. ஏழை, எளியவர்களை ஆதரித்தேன். என் ஆயுள் முடிந்து யமலோகம் சென்றேன்.

எனக்குப் பிள்ளையோ, கர்மாக்களை பொறுப்போடு செய்ய உறவினர்களோ இல்லை. அதனால் இந்த பிரேத ஜென்மத்தை எனக்குக் கொடுத்தான் யமதருமன். நீண்ட காலமாக இந்த பிரேத ஜென்மாவோடு திரிகிறேன்.

மரித்தவனுக்குச் செய்யும் மாசிகம், சிரார்த்தம், சோதகும்பம், விருஷோற்சர்க்கம் எதுவும் நடத்தப்படாததால் இந்த பிரேத ஜென்மா வந்து விட்டது. குடிமக்களின் காவலனே! எனக்காக இந்த கர்மாக்களைச் செய்து என்னை இந்த அவலத்திலிருந்து நீதான் விடுவிக்க வேண்டும். அதற்கு வெகுமதியாக என்னிடமிருக்கும் ஒரு சிறப்பான மாணிக்கத்தை உனக்குக் கொடுக்கிறேன்" என்று அந்தப்பிரேதம் மாணிக்கத்தை பப்ரு வாகனனிடம் தந்தது.

கொற்றவன் அந்த பிரேதத்திடம் "நான் எப்படி உனக்குக் கிரியை செய்ய முடியும்? என்னென்ன செய்தால் இந்த அவஸ்தையிலிருந்து உனக்கு விடுதலை கிடைக்கும்?" என்று கேட்டான்.

"வேந்தே! ஸ்ரீமந் நாராயணனுக்கு ஆராதனை செய்து, அக்கினி வளர்த்து ஹோமம் செய்து காளைக் கன்றைத் தானம் கொடுக்க வேண்டும். வேதியர்களுக்கு குடை, செருப்பு, மோதிரம், ஆடை, சொர்ணம், வெள்ளி,

கம்பளி, புத்தகம் முதலானவற்றை வழங்க வேண்டும். இதெல்லாம் செய்தால் இந்த பிரேத ஜென்மம் விடுபடும்'' என்றது.

"அங்கே இத்தனை பிரேத ஜென்மங்கள் அலைகின்றதே! அவர்கள் அத்தனை பேருக்குமா வாரிசு இல்லை?'' என்று வியந்தான் பப்ரு வாகனன்.

"அரசே! சான்றோர், அபலை ஸ்த்ரீகள், குழந்தைகள், அங்கஹீனர்கள் இவர்களின் சொத்தைக் கொள்ளையடித்தவர்களுக்குக் கர்மா செய்தும் பலனில்லை! மாற்றான் மனைவியை விரும்பியவன், கன்னியரின் கற்பைச் சூறையாடியவன், தங்கத்தையும், நவரத்தினங்களையும் அபகரித்தவன், செய்நன்றி மறந்தவன், நன்மை செய்தவனுக்குக் கெடுதல் செய்தவன் இவர்களுக்கெல்லாம் இதுதான் தண்டனை'' என்றது பிரேதம்.

மன்னனுடைய தளபதி வரும் குதிரையின் குளம்படிச் சப்தம் கேட்டதும் பிரேதம் மறைந்து விட்டது. அரசன் நகரத்துக்குச் சென்றான். வைசியனுக்கான கர்மாக்களையும், தர்மங்களையும் விதிப்படி நடத்தினான்.

பிரேத ஜென்மத்துக்கு விடுதலை கிடைத்தது. கருடா! எண்ணைக் குடங்களைப் பெரியோர்களுக்குத் தானம் கொடுப்பதும், வெள்ளி, தங்கச் சொம்புகளில் (குடங்கள் கூட) பால் அல்லது நெய் நிறைத்து (இரண்டும் செய்வதும் விசேஷம்) அஷ்டதிக்பாலர்களையும், திருமாலையும் ஆராதித்து அவற்றை ஆன்றோர்களுக்குத் தானம் கொடுப்பதும் சகல பாபங்களையும் போக்கும். பிரேத ஜென்மாவை அழிக்கும்'' என்று ஸ்ரீஹரி கூறியதாக சூதமுனிவர் சனகாதியரிடம் சொன்னார்.



# இரண்டாம் பாகம்

## 1. பிறப்பு, இறப்பு விதிகள்

சூதமா முனிவர், சனகாதி முனிவர்களைப் பார்த்து "இதுவரை ஸ்ரீமத் நாராயணன், மானிட ஜென்மத்தில் செய்ய வேண்டிய தான, தருமங்கள், அதனால் ஏற்படும் புண்ணியம், பாவங்களினால் ஏற்படும் நரக வேதனைகள், பிரேத ஜென்மமும், அது தொலைவதற்கான பரிகாரங்களையும் கருட பகவானுக்கு உரைத்ததை அப்படியே உங்களுக்கு சொன்னேன். அடுத்து கருடனுக்கு, பகவான் விளக்கியவற்றையும் கூறுகிறேன்."

சாதீட்டு உள்ள இல்லத்தில் உறவினரல்லாத, கோத்திர மற்றவர்கள் சாப்பிட்டால் ஆயுள் குறையும். சட்டத்துக்குப் புறம்பான தொழில் செய்பவனுக்கும், பாவமென்று தெரிந்தே கொலை புரிகின்றவனுக்கும், வாழ்நாள் குறுகும். வெகுகாலம் நரகத்தில் கிடப்பார்கள். உயிர்வதை செய்பவருக்கும் இதே நிலைதான். கருவைச் சிதைப்பவர்களுக்கு, மறுபிறவில் குழந்தைகள் பிறக்காது. இல்லையென்றால் அற்பாயுளில் மடியும்.

தேகம் அநித்யம் என்பதை எப்போதும் மறக்கலாகாது. அதிகமான பாபங்களைச் செய்பவன் நாய் நரியாகப் பிறக்கின்றான்–மரணத்தைவிட ஜெனனம் அதிக துன்பத்தைத் தரக்கூடியது. கர்ப்ப காலத்தில் அன்னையின் மலம், சிறுநீர் ஆகிய நாற்றங்களை அது சகித்தேயாக வேண்டும். தாய் இருமும் சமயம் சிசுவுக்கு நடுக்கமேற்படும். தாய் தும்மினால் சிசு அதிரும். தாய்க்குக் காய்ச்சல் கண்டால் கர்ப்பம் கொதிக்கும். பெற்றவளுக்கு வைசூரி கண்டால், குழந்தைக்குப் பார்வை பறிபோகலாம்.

"பிறவா வரம் வேண்டும்" என்று மகான்கள் கேட்பது இதற்காகத்தான்! ஒழுக்கமும், நேர்மையும், நற்பண்புகளும், தெய்வ பக்தியும் கொண்டவனுக்கு மறுபிறவி வாய்ப்பதில்லை. பொருளைச் சேமித்து அழகு பார்க்காமல் தீர்த்தயாத்திரை, தான, தருமம் என்று புண்ணியங்களைப் பெருக்கிக் கொள்ள வேண்டும்.

அலைகள் தோன்றி மடிவது போல், பாவிகள் மீண்டும் மீண்டும் பிறந்து பாவத்தைப் பெருக்கிக் கொள்கிறார்கள். பிறந்தவுடன் ஒரு சிசு மடிவது சிசுவின் பாவத்தோடு அதன் பெற்றோர்களின் பாபமும் சேர்ந்து தான் நடக்கிறது. நீண்ட ஆயுள் ஆரோக்கியமாக பேரன், பேத்திகளோடு வாழ்பவர் புண்ணியவான்.

கருடா! இனி மரணம் பற்றிய சில கர்மாக்களை சொல்கிறேன் கேள். ஒரு பெண் கருவாகி ஆறு மாதங்களுக்குள் அது கரைந்து போனால் ஆறு நாட்கள் தாய்க்கு சூதகத்தீட்டு உண்டு. ஏழுமாதம் என்றால் ஏழுநாட்கள். இப்படியே கணக்கிட வேண்டும். தந்தைக்குத் தீட்டு கிடையாது. இந்தச் சிசுவுக்காக செய்யப்பட வேண்டிய கிரியை எதுவும் இல்லை.

ஐந்து வயதுக்குள் குழந்தை இறந்தால், அந்தக் குழந்தையை நினைத்து ஊர்க்குழந்தைகளுக்கு பால் சோறோ, தயிர் சாதமோ போட வேண்டும்.

பொய் சொல்லாதிருப்பது, கடமை தவறாதிருப்பது, விட்டுக் கொடுத்து வாழ்வது, பெரியோருக்குக் கீழ்ப்படிவது, இனிய சொல் பேசுதல், தான தருமம் செய்வது இதெல்லாம் பிறவியை அழிக்கும் நற்கர்மாக்கள்.

## உ. புத்திரர் செய்யும் கர்மாக்கள்.

ஒரு வயது நான்கு மாதம் வரை உள்ள குழந்தை சிசு. மூன்று வயது வரை பாலகன். ஆறு வயது வரை உள்ள குழந்தை குமரன். ஒன்பது வயது வரை பௌண்டகன். பதினாறு வயது வரை கைசோரன் என்று சொல்வதுண்டு.

ஐந்து வயதுக்குள் குழந்தை மரித்தால் ஊர் குழந்தைகளுக்கு பால், பாயசம், உணவு அளிக்க வேண்டும். அந்தக் குழந்தை மரணமடைந்த 11, 12ம் நாட்களில் சாஸ்திரங்களில் கூறியிருக்கும் கர்மாக்களைச் செய்ய வேண்டும்.

ஐந்து வயதுக்கு மேல் 12 வயது வரை உள்ள குழந்தை மரித்தால் விருஷோற்சர்க்கம் முதலியன நடத்த வேண்டும். இதற்கு குடம், குடை, தீபம் முதலான தானங்களும் உண்டு. அப்படி நடத்தாவிடில் மறுபிறவியில் மரமாகப் பிறந்து தன் உறுப்புகளை (பழம், காய், விறகு)த்தானம் செய்ய நேரிடும்.

தந்தையின் ஜீவனின் ஒரு பிரிவே மகனாகப் பிறப்பதாக சாஸ்திரம் சொல்கிறது. ஆதலால் தந்தை இறந்தால் புத்திரனும், புதல்வன் மடிந்தால் தந்தையும் கர்மா செய்ய வேண்டும்.

சூரியன் ஒருவனே! சந்திரனும் ஒருவனே! நூறு குடங்களில் நீர் நிரப்பி வெயிலில் வைத்தால் ஒவ்வொன்றிலும் ஒரு பகலவன் தெரிவான். பௌர்ணமி இரவில் ஒவ்வொரு குடத்திலும் சந்திரன் புலப்படுவான்.

அதுபோலத்தான் ஒரு தகப்பனுக்குப் பலபிள்ளைகள் பிறக்கின்றனர்.

அதனால் தான் பிள்ளைகள் தந்தையின் சாயலையும், குணத்தையும் கொண்டிருக்கின்றனர்."

இந்த இடத்தில் கருடன் குறுக்கிட்டு, "மாதவா! அப்படியானால் குருடருக்குக் பார்வையற்ற பிள்ளையும், ஊமையருக்குப் பேச்சுவராத மைந்தரும் பிறப்பதில்லையே?" என்று கேட்டார்.

"சுபர்ணா! சிறப்பான சந்தேகம் இது. அது அந்தக் குழந்தை செய்த புண்ணிய பலன். ஒரே நேரத்தில் வெவ்வேறு பெற்றோருக்குப் பிறக்கும். இருகுழந்தைகளில் ஒருவர் செல்வந்தராகவும், மற்றொருவர் தரித்திரராகவும் இருப்பர். அதேபோல் ஒருவர் ஒழுக்க சீலராகவும், இன்னொருவர் ஒழுக்கம் கெட்டவராகவும் இருப்பர். அதற்குக் காரணம் அந்தந்த ஜீவர்கள் முற்பிறவியில் செய்யும் பாப புண்ணியங்களே! பெற்றோரின், தாத்தா, பாட்டியின் குண, குற்ற தோஷங்களும் இதில் சேருகிறது.

பாட்டன் கருமியாக சொத்து சேர்த்திருப்பான். பேரன் அதை தான தருமங்களில், ஆக்க செயல்களில் செலவிட்டால் வைகுண்ட பதவி கிட்டும். ஆடம்பர வகையில் செலவு செய்யப்படுமானால் பாபம் குவியும்.

ஒருவன் தன் துணைவியின் கருவிலிருந்து உருவான சிசுவின் முகதரிசனத்தைப் பெற்ற போதே 'புத்' என்ற நரகத்தில் வீழ்வதிலிருந்து தப்பி விடுகிறான். புத்திரப் பேறில்லாதவன் நரகத்தை அடைவதாக வேதம் சொல்கிறது. மனைவி மூலமாகக் கிடைக்கும் சந்தான பாக்கியத்தைக் கண்டு பிதுர் தேவதைகள் குதூகலிக்கிறார்கள்.

ஒருவனுக்குப் பத்து புதல்வர்கள் பிறந்தாலும், மூத்த புத்திரனே தந்தைக்கான ஈமச்சடங்குகளையும், மற்றுமுள்ள கிரியைகளையும் செய்யக் கடமைப்பட்டவன். மற்ற குமாரர்களால் பூலோக வாழ்வுக்கு மட்டுமே உதவ முடியும்.

ஒருவன் பேரனைப் பார்த்த பிறகு மரணமடைந்தால் அவனுக்கு முக்தி கிடைக்கும். வரதட்சணை வாங்காமல் ஒருமங்கையை மணந்து, அவளை மகிழ்ச்சியாக வைத்திருந்து, அப்போது ஒரு பிள்ளை பிறந்தால், அந்த மைந்தன் 21 தலை முறையினரைக் கரையேற்றுவான்.

தன் குலத்தில் ஒழுக்கமான நங்கையை மணந்து அவள் மூலம் பெறப்படும் மைந்தனே சற்புத்திரன் எனப்படுவான். அவன்தான் பெற்றோருக்குக் கர்மா செய்ய உரிமையுள்ளவன். காதல் கிழத்தியின் மகனுக்கு அத்தகைய உரிமை

முற்றிலுமாகக் கிடையாது. காதல் கிழத்தியின் புதல்வன் ஆண்டு தோறும் சிராத்தம் கொடுக்கலாம். ஆதலால் மனிதர்கள் சற்புத்திரனை அடையவே முயற்சிக்க வேண்டும். குமாரனே யானாலும் ஒரு ஜீவன் அகௌரவத்தை அடையக் காரணமானால் பாபமே சம்பவிக்கும். கண்ணால் கண்டது மட்டுமே சுகமல்ல!

## 3. புருஷன் + மனைவி

உலக வாழ்க்கையை முடித்துக் கொண்டவருக்கு ஒரு வருட காலம் வரை அனைத்து கிரியைகளையும் சாஸ்திரங்களில் குறிப்பிட்டுள்ளபடி நடத்த வேண்டும். அவருடைய வம்சத்தில் அதற்கு முன் இறந்தவருடைய பிண்டத்தோடு இவருடைய பிண்டத்தையும் சேர்க்கும் சபிண்டி கரணம் என்ற கிரியையை நடத்த வேண்டும். அந்தச் சடங்கைச் செய்வதால் மாண்டவர். பிரேதத்துவம் நீங்கி பிதுர் தேவர்களோடு சேர்ந்து கொள்வார்.

ஒருவர் மடிந்த 12ம் தினத்திலும், மூன்றாவது பட்சத்திலும், ஆறாவது மாதத்திலும் சபிண்டீ கரணம் என்ற கர்மாவைச் செய்யலாம். மரணமடைந்தவருக்கு இந்தச் சடங்கை நடத்தும் வரை அவர் பிரேத ஜென்மத்துடன் இருப்பார். ஆகையால் சபிண்டீ கரணம் முடிக்கும் வரை இறந்தவருடைய பிள்ளை எந்தவித சுப காரியத்தையும் நடத்தக்கூடாது. சபிண்டீ கரணத்தில் பிண்டத்தைக் கூட்டியபிறகு இறந்தவர் பிரேதத்துவம் நீங்கப்பெற்று பிதுர்த்துவம் பெற்று மகிழ்வார்.

சபிண்டீ கரணம் முடிந்தபின் தாய், தந்தையின் வம்சாவளியில் மூன்று தலைமுறையினருக்கு சிரார்த்தம் நடத்தவேண்டும்.

பிள்ளை இல்லாதவர்களுக்கு இறந்தவனின் மூத்த சகோதரன் அல்லது இளைய (கடைசி) சகோதரன் அல்லது அவர்கள் புதல்வன் கர்மா செய்யலாம். இப்படி யாருமே இல்லாவிடில் மனைவி கையால் தர்ப்பை புல் வாங்கி தாயாதிகள் நடத்தலாம். தாயாதிகள் பின் வாங்கினால் புரோகிதர்களே செய்யலாம்.

பிள்ளையில்லாத மங்கை இறந்தால் அவள் கணவனே கர்மாக்களை நடத்த வேண்டும்.

பிண்டத்தை சேர்த்த பிறகு மூன்று தலைமுறையினருக்கும் திதி கொடுக்காவிட்டால், பாபம் சம்பவிக்கும். (அவ்வாறு சிரார்த்தம் செய்பவனும், அதை நடத்தித்தரும் புரோகிதனும் நரகத்தில் உழல்வார்கள்.)

மாண்டவனுக்குக் கிரியை நடத்த பலர் இருந்தாலும் ஒரு வருடம் வரை ஒருவரே சகல கர்மாக்களையும் செய்ய வேண்டும். அந்த ஒரு ஆண்டும் நித்திய திதி செய்வதோடு ஒரு குடத்தில் நீர் நிறைத்து உதககும்ப தானத்தைச் செய்ய வேண்டும். மாண்டவருக்குரிய சடங்குகளை தவறாமல் நடத்தினால் மாண்டவர் விமானம் ஏறி நல்லுலகை அடைவார்.

ஒரு பெண் பதிவிரதையாக வாழ்ந்து, கணவன் மடிந்தது கண்டு தானும் மரித்தால் அவளுக்கு நற்கதி கிடைக்கும். அவள் கணவன் மகாபாவியாக இருந்தாலும், அவளது கற்பு அவனையும் அவளுடன் சொர்க்கத்தில் சேர்க்கும்.

அப்படி இறந்த பெற்றோருக்கு அவர்களின் குமாரன் ஒரே சபீண்டீ கரணத்தை செய்தால் போதும். சிரார்த்தம் மட்டும் தனித்தனியாகச் செய்ய வேண்டும்.

புருஷனைத் தெய்வமாக எண்ணி வாழுங்காலத்தில் அவனுக்கு உறுதுணையாக இருந்து, அனைவரிடமும் கருணையோடு நடந்து கொண்ட மங்கை கணவனோடு உயிர் துறந்தால் அவள் 3½ கோடி தேவ ஆண்டுகள் சொர்க்கத்தில் தன் பர்த்தாவோடு சுகித்திருப்பாள்.

கணவன் இறந்த பிறகு வேறு ஒருவனுடன் வாழும் பெண் பிறந்த வம்சத்துக்கு தோஷம் உண்டாக்குவாள். அதோடு நரக தண்டனையும் நிச்சயம் கிடைக்கும். ஒரு புருஷன் நல்லவனோ, கெட்டவனோ எப்படியிருந்தாலும் அவன் வாழ்ந்தபோதும், மடிந்த போதும் அவனையே தெய்வமாக எண்ணி அன்புடன் பழகி, கற்பு ஒழுக்கத்தில் நிலை நிற்பவளை தேவரும் வணங்குவர்.

கணவனுக்கு எல்லா விதத்திலும் மனைவி அனுகூலமாயிருந்து உதவி செய்வதும், சேவை செய்வதும் பத்தினிப் பெண்ணின் தருமமாகும்.

தாலி கட்டிய பதியை மதிக்காமல், அலட்சியம் செய்து தன் இஷ்டப்படி வாழ்கின்றவள் மாண்ட பிறகு கொடிய நரகத்தை அடைகிறாள். மறுஜென்மாவில் ஒரு பொல்லாதவனைக் கணவனாகப் பெற்று அடுத்தடுத்து கொடுந்துயருக்கு ஆளாகிறாள்.

வைநதேயா! இறந்தவன் மோட்சமடையும், சபிண்டீ கரணம் பற்றியும், ஒரு கற்புக்கரசியினால் புகுந்த வீடு, பிறந்த வீடு இரண்டும் பெருமை பெறுவதோடு, அவள் சுவர்க்க வாசமும் அனுபவிக்கிறாள் என்பது பற்றியும் விளக்கி விட்டேன். இன்னும் ஏதாவது சந்தேகம் உள்ளதா?" என்று கேட்டார் ஸ்ரீமந் நாராயணர்.

# 4. கிரியை நடத்தும் முறைகள்

"ஸ்வாமி! இறந்தவரைக் குறித்து கிரியை நடத்தும் போது அனுசரிக்க வேண்டிய முறைகள் என்ன?" என்று வினவினார்.

"சுபர்ணா! பூவுலகில் ஒருவன் சத்புத்திரனை அடையாவிட்டால் எவ்வுலகிலும் இன்பமில்லை! பெற்றோரைப் பேணி, தெய்வத்தைப் பூஜித்து, பிதுர் கர்மாக்களை முறையோடு செய்பவனுக்கே சற்புத்திரன் பிறப்பான். முதலில் நல்ல குலத்தில் உதித்த ஒழுக்கமுள்ள ஒரு நங்கையை அக்னி சாட்சியாகக் கைப் பிடிக்க வேண்டும். அவளை நேசத்துடன் நடத்தி, விருந்தினரை பாசத்துடன் வரவேற்று பண்போடு வாழ்ந்தால், நேர்மையாகப் பொருளீட்டினால், பிறர் பொருளுக்கு ஆசைப்படாதிருந்தால்' தீர்க்கா யுளுடன் நோயற்ற நற்குணசாலி மகனாக உதிப்பான்.

மனைவிக்குக் கருச்சிதைவு ஏற்பட்டால் கணவனுக்கு நற்கதி கிடைக்காது.

கிரியைகள் செய்யுமிடத்தை முதலில் சுத்தப்படுத்த வேண்டும். அசுத்தமான இடத்தில் கர்மாக்களைச் செய்தால் பூத, பிரேத, பைசாசங்கள் கூடி நின்று கிரியைகளை நடத்த விடாமல் தடுக்கும். சுத்தம் செய்த இடத்தில் தேவர்கள் வந்து நின்று ஆசீர்வதிப்பர். தூய்மையற்ற இடத்தில் சடங்குகளைச் செய்தால் அதன்பலன் இறந்தவரைச் சென்றடையாது. அந்த ஜீவன் நரகத்தில் அவதியுறும்."

"ஆராவமுதே! பிதுர் கர்மா நடத்தும்போது எள்ளையும், தர்ப்பையையும் உபயோகப்படுத்தும் காரணத்தையும் விளக்கியருள வேண்டும்" என்று கோரினார் விநதாபுத்திரர்.

"எள் எனது வியர்வையில் தோன்றிய பரிசுத்தமான தானியமாகும். எள்ளோதரை எனக்குப் பிரியமான நிவேதனம். சகல பீடையையும் போக்கக் கூடியது எள். எள்ளை தானம் செய்தால் பாபங்கள் தீரும். சிரார்த்தம் செய்யும் போது, கறுப்பு எள்ளில் பட்சணம் செய்தால் பிதுர்த் தேவதைகள் திருப்தியடைவார்கள்.

எள்ளிலிருந்து எடுக்கும், நல்லெண்ணையில் தீபம் ஏற்றினால் கெட்ட சக்திகள் அண்டாது. எள்ளுப்பிண்ணாக்கைச் சாப்பிடும் பசுவின் பால் ரோகத்தைப் போக்கக்கூடியது.

தர்ப்பையின் ஒரு நுனியில் பிரம்மாவும், மறுமுனையில் சிவனும் நடுப்பகுதியில் நானும் வாசம் செய்கின்றோம். இது முதன் முதலில் ஆகாயத்தில் தோன்றிய சூசகப்புல்.

"விரிஞ்சேன ஸஹோத்பன்ன பரமேஷ்டீ நிஸர்கஜ |
நிதஸர்வாணி பாபாநி தர்ப ஸ்வஸ்தி கரேபவ||"

என்ற ஸ்லோகத்தை சொல்லித்தான் தர்ப்பையைப் பறிக்க வேண்டும். தர்ப்பை இல்லாமல் சிரார்த்தம் நடத்த முடியாது. தர்ப்பைக்கு நிர்மால்யம் என்ற தோஷமில்லை. ஆகையால் பயன்படுத்திய, தர்ப்பையையே மீண்டும் பயன்படுத்தலாம்.

ஏகாதசி, துளசி, பசு, பகவத்கீதை, சான்றோரிடம் பக்தி, எனது பாதங்கள் இவை அனைத்தும் சம்சார சாகரத்தைக் கடக்கும் தெப்பமாகும். இவைகளைக் கட்டியிருப்பது தர்ப்பைப்புல்.

மனிதன் பிறப்பிலிருந்து இறப்பு வரை நடக்கும் முக்கியமான சடங்குகளிலெல்லாம் தர்ப்பை உறவாடும். கோவில்களில் கும்பாபிஷேக சமயங்களில், தங்கக்கம்பி அல்லது வெள்ளிக்கம்பியைப் பயன்படுத்த வேண்டிய இடங்களில் தர்ப்பையே உபயோகிப்பார்கள். தர்ப்பையே நீரில் மூழ்கினாலும் அழுகாது. தண்ணீர் இல்லாவிட்டாலும் வாடாது. தூயபுல் ஆனதால் தூப்புல் என்ற பெயரும் தர்ப்பைக்கு உண்டு. கிரகண சமயத்தில் தர்ப்பைக்கு வீரியம் அதிகம். இது அமிர்த வீரியம் எனப்படும். ஆலய பிரதிஷ்டைக்கு அமைக்கப்படும் பந்தல் கால்களில் தர்ப்பையைக் கட்டுவது விக்னமில்லாமல் செயல் முடிவதற்காக.

சாகும் நிலையில் இருப்பவரை, கோமயத்தால் மெழுகி சுத்தம் செய்யப்பட்ட இடத்தில் தர்ப்பைப்புல்லைப் பரப்பி, அதன்மேல் எள்ளை இறைத்து, அதன் மீது படுக்க வைத்து தர்ப்பையையும், துளசியையும் கையில் கொடுத்து என் நாமங்களைக் கூறியபடி இறப்பானே" யாகில் அவனுக்கு வைகுண்ட வாசம் நிச்சயம்.

துளசியோடு சேர்த்து தானங்களைச் செய்தால் அதற்கு மகிமை மிகுதி. வைகுண்டத்தில் உண்டானது உப்பு. உப்பை தானம் செய்வது மேன்மையைத் தரும். சாகும் தருணத்தில் உப்பு தானம் செய்தால் சொர்க்க லோக வாசம் கிடைக்கும்.

# 5. தானத்தின் மேன்மை

"பருத்தி தானமும் மிகச்சிறந்தது. ஏனெனில் மானத்தைக்காக்கும் ஆடையைத் தருவது பருத்தி. உபநயனத்தின் கர்த்தாவான பூணூலுக்கும் பருத்தி அத்தியாவசியமானது. அதனால் இது மகாதானம் என்று சிறப்பிக்கப்படுகிறது. பருத்தி தானம் செய்தவருக்கு, கைலாச வாசம் கட்டாயம் கிடைக்கும். அழகிய மேனியும், தீர்க்காயுளும் பெற்று உயர்ந்த ஐஸ்வர்ய குலத்தில் பிறப்பான். புகழோடு வாழ்ந்து சொர்க பதவியை அடைவான்.

எள்ளு, தானம் பற்றி ஏற்கனவே சொல்லி விட்டேன். கோதானமும், பூமி தானமும் செய்தால் கொடிய பாபங்களும் சீக்கிரம் அழிந்து விடும். ஆனால் இவற்றை சாமான்யர்களுக்குக் கொடுக்கக்கூடாது. உத்தம பெரியோர்களுக்கே வழங்க வேண்டும்.

ஒரு மனிதன் இறக்கும் சமயத்தில் கொடுக்கும் தானம் சிறந்த பலனை அளிக்கும். கிரகண புண்ணிய காலமும் தானம் செய்வதற்கு ஏற்ற காலம். உயிரோடிருக்கையில் செய்யும் சுவர்ணதானமும், தானிய தானமும் அப்பிறவிப்பாவத்தையும் நசிக்கச் செய்யும். இறக்கும் சமயம் இரும்பைத்தானம் செய்வது முக்தியைத் தரும். யமன் மகிழ்ந்து தண்டனையைக் குறைப்பான். திலதானம் (எள்) யம பயத்தை நீக்கும். பருத்திதானம் யம தூதர்களுக்கு நரரிடம் கருணையை ஏற்படுத்தும். நவதானிய தானம் காலதூதர்களை ஜீவனுக்கு வேண்டியதைக் கொடுக்கச் செய்யும்.

ஒருவனுடைய மரணப்படுக்கையில் என்னை தியானித்தால் அவனுக்கு என் உலகத்தில் நித்திய வாசம் கிட்டும். தந்தை மரித்த பிறகு புதல்வன் செய்யும் பெரிய சிராத்தத்தை விட மரணகாலத்தில் தகப்பனார் அருகிருந்து கொடுக்கும் தான தருமங்கள் அதிகப்பலனைத் தரும்.

கருடா! பஞ்ச பூதங்களும் (நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம்) என் சொரூபம் என்பதை அனைவரும் உணர வேண்டும். கொடுப்பவனும் யாமே! வாங்குவதும் யாமே! உயிர்கள் முற்பிறப்பில் செய்த பாபபுண்ணியங்களுக்கு ஏற்ப சொர்க்க வாசமும், நரக வேதனையும் கிடைக்கின்றன.

சுபர்ணா! எனது ஸ்தலங்களில் தானம் செய்பவன் கூடுதலாகப் புண்ணியத்தை அடைகிறான். பூதானம் செய்தவன் அநேக ஆண்டுகள் சொர்க்கத்தில் சுகமாயிருப்பான். தீபதானம் செய்தால் இருட்டில் யம

தூதர்களுடன் செல்லும் போது வெளிச்சம் முன்னால் போகும். நல்ல வழியில் யம தூதர்கள் அழைத்துச் செல்வர்.

அவனுடைய மூதாதையர் அங்கு இருந்தால் அவர்களையும் நல்ல உலகத்திற்கு அழைத்துச் செல்லும் சக்தி அவனுக்கு உண்டு.

* * *

பிறப்பெடுத்த அன்றே இறப்பு நிர்ணயிக்கப்படுகிறது. அதனால் உயிரோடு இருக்கும்போதே தானங்களைச் செய்து புண்ணியங்களை ஈட்ட வேண்டும். ஆசனப் பலகையையும், தானாக சமைத்த (தன் வருமானத்தில் ஆள் வைத்து சமைத்தாலும் சரி) உணவையும், செப்புப் பாத்திரத்தையும் தானம் செய்பவன் மரணமடைந்த பிறகு ஆகாய மாக்கமாக இன்பமான பயணத்தை அடைவான். யானை, குதிரை போன்றவற்றை கோவிலுக்கு வழங்குபவருக்கு அதிக புண்ணியம் உண்டாகும். சுமங்கலி, கன்னிகைகளுக்கு நவராத்திரி, பௌர்ணமி போன்ற காலங்களிலும், தர்ப்பண, சிரார்த்த காலங்களில் வேதியருக்கும் தாம்பூலம் கொடுப்பதாலும், அர்ச்சனைக்குப் பூக்கள் அளித்தாலும், யம கிங்கரர்கள் ஜீவனை வருத்த மாட்டார்கள். வஸ்திர தானம் செய்பவர் பார்வைக்குக் கூற்றுவர் சத்புருஷராய் காட்சியளிப்பார்."

"ஸ்வாமி உடலிலிருந்து உயிர் எவ்வாறு பிரிகிறது என்று கூறியருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார் கருடன்.

"சுபர்ணா! சராசரி மானிடனின் உயிர் கண், மூக்கு, வாய், காதுகள் வழியாக சொட்டு நீராகவோ, பால் ஊற்றியிருந்தால் பாலாகவோ, அடிபட்டால் உதிரவடிவிலோ வெளியேறிவிடும்.

ஞானிகளின் ஆத்மா கபாலம் விரிந்து வெளிப்படும். சிலருக்கு வியர்வை வழியாகவும் நீங்கிவிடும்.

பாவிகளின் ஜீவன் பலவிதமான உபாதைப்பட்டு தான் நீங்கும்.

ஜீவன் நீங்கப் பெற்ற சரீரம் விறைத்து மரக்கட்டையாகிவிடும். மானிட தேகம் பசியென்னும் அக்னியையும், காற்று என்ற வாயுவையும், நீர் என்னும் அப்புவையும், (ஆகாயம் தான் உடல் ; மண்தான் ஜீரணமாகி சக்தியை வெளிப்படுத்துகிறது) காமம், குரோதம் முதலான ஆறு தீய குணங்களையும், கண், மூக்கு, வாய், காது, தொடும் உணர்ச்சியைப் பெற்ற சரீர (பஞ்சகர்ம இந்திரியங்கள்), தையும் கொண்டதாகும்.

இவை அனைத்தும் மனித உடலில் கள்வர்களைப் போல் பதுங்கி ஒளிந்து கொண்டு, ஒன்றோடு ஒன்று கலந்தும் இருப்பனவாகும். ஜீவன் தேகத்தை விட்டு விலகுகையில் இவையெல்லாம் ஆகாயத்தில் கலந்து விடும். மறுபடி கர்ம வினையால் இவையெல்லாம் சேர்ந்து ஜெனனம் ஏற்படுகிறது. புண்ணியாத்மா நல்ல குலத்தில் செல்வந்தனாக, அங்கஹீன மற்றவனாகப் பிறக்கிறது.

தசை, எலும்பு, நரம்புகளால் பிணைக்கப்பட்டிருக்கிறது. சிறுநீரும், மலமும் சிறிதளவாவது தங்கியிருக்கும். நவத்துவாரங்களும், ரோமத்துவாரங்களும் கழிவுகளை வெளிப்படுத்திக் கொண்டேயிருக்கிறது. உடலை விட்டு உயிர் பிரிந்ததும் அத்தனையும் நசித்து விடும். மனிதன் மட்டுமல்ல, எல்லா உயிர்களிடமும் மாயை உறைந்திருக்கும். தேவர்களுக்கும் சரீரம் உண்டு. வயோதிகம் தான் கிடையாது.

## 6. தாம்பத்யம் + பத்யம்

"நைமிசாரண்ய முனிவர்களே! மானிட சரீரம் எப்படி உண்டாகிறதென்பதே விநதா புத்திரனின் அடுத்த கேள்வி. அதற்கு ஸ்ரீமந் நாராயணன் கூறிய பதிலைக் கேளுங்கள்" என்றார் சூதபுராணிகர்.

"கச்யப குமாரா!" ஆணும், பெண்ணும் தாம்பத்ய உறவு கொள்வதால் கரு உருவாகி சிறிது சிறிதாக வளர்ந்து பத்து மாதத்தில் குழந்தை பிறக்கிறது. ஸ்த்ரீ மாத விலக்கு தோன்றியதும் நான்கு தினங்கள் ஒதுங்கி இருக்க வேண்டும். அவளைப் பார்ப்பதும் பாவம் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. அதற்கான காரணத்தைச் சொல்கிறேன். கேள்.

முன்பொருமுறை தேவேந்திரன், தனக்கு குருவாயிருந்து யாகம் செய்த விஸ்வரூபனைக் கொன்று விட்டான். அதனால் அவனை பிரம்மஹத்தி தோஷம் பற்றிக் கொண்டது. அது இந்திரனை விட்டு நீங்க தேவர்கள் என்னிடம் வந்து வேண்டினார்கள். அதை நான் நான்கு பங்காகப் பிரித்து பூமி, பெண்கள், மரங்கள், நதிகள் இவர்களுக்கு அளித்தேன். உவர் மண், பூமியின் பிரம்மஹத்தி. நதிகளின் பிரம்மஹத்தி நுரை. மரங்களின் பிரம்மஹத்தி அதன் பொள்ளல். மங்கையரின் பங்கு தோஷம் தான் மாதவிடாய்.

"இதை நாங்க்ள் ஏற்பதால் என்ன பலன்?" என்று நால்வரும் கேட்டனர். மண்ணில் பயிர்பச்சைகள் விளைந்து சகல உயிர்களுக்கும் பயன்படும். தண்ணீர் இறைக்க இறைக்க ஊறும். அதோடு நதியில் ஞானிகள் நீராடி

அதைப் புனிதப்படுத்துவர். மரங்கள் காய், கனி, வேர், சமித்து என்று அனைத்துப் பயனையும் கொடுத்து நீண்ட ஆயுளுடைய்தாக இருக்கும்.

மாதர் செய்யும் பாவம் மணாளனை அடையும். ஆனால் பதி செய்யும் தீமையில் பத்தினிக்கு சம்மந்தமில்லை! தாய்மை அனைவராலும் போற்றப்படும் என்று வரங்கள் கொடுத்து சமாதானம் செய்தேன்.

முதல்நாள் கொலைகாரியைப் பார்த்த பாவமும், இரண்டாம் நாள் கொள்ளையடித்தவளைப் பார்த்த தோஷமும், மூன்றாம் நாள் சிசுஹத்தி செய்தவளைக் கண்ட குற்றமும் ஏற்படும். நான்காம் நாள் நீராடிய பிறகு தூய்மையடைவாள். உப்பிட்ட பண்டத்தை உண்ட பிறகே பர்த்தாவையும், பிள்ளைகளையும், சூரியனையும் காணலாம். மீறிப் பார்த்தால் சூரிய சாபம் உண்டாகும். கணவன், புத்திரர்களின் ஆயுள் குறையும். அப்போதும் அப்பெண் பூஜை செய்யக் கூடாது. கோயில், யாக, சிராத்த காரியங்களில் கலந்து கொள்ளலாகாது.

மாதவிலக்கு நாட்களில் ஆண்–பெண் கூடினால் எவர் கட்டாயத்தால் சம்போகம் நேர்ந்ததோ அவருக்கு கொடிய ரோகம் வரும்.

ஐந்தாவது நாள் இல்லறக் கடமைகளைச் செய்ய மங்கை லாயக்காகிறாள். ஒரு நங்கை மாத விலக்கான ஆறாவது நாள்முதல் 18–வது தினம் வரை உள்ள ஏழு இரட்டை நாட்களிலும் (6, 8, 10, 12, 14,16,18) இரவு வேளையில் பர்த்தாவோடு மருவிக்களித்தால் அவளுக்கு ஆண் குழந்தை பிறக்கும். அந்தக் குழந்தை நல்ல பண்புகளும், பக்தியும் கொண்டதாயிருக்கும்.

பொதுவாக ஒரு மடந்தை மாத விலக்கான நான்காம் நாளிலிருந்து எட்டாம்நாள் வரை கருவுற வாய்ப்புண்டு. தம்பதியர் சத்புத்திரன் வேண்டுமென ஏகமனதாக எண்ணி, கோபம், சோகம், விரக்தியற்றவராய் கலவி செய்யும்போது ஆணிடமிருந்து வெளிப்படும் சுக்கிலமும், பெண்ணிடமிருந்து வெளியாகும் சுரோணிதமும் வீரியமுடையதாக, உன்னதமானதாக இருக்கும். இதில் ஆணின் சுக்கிலம் வலுவுற்றதானால் ஆண் பிள்ளையும், பெண்ணின் சுரோணிதம் தேஜஸ் மிகுந்தால் பெண் குழந்தையும் பிறக்கும். இரண்டு வீரியமும் சமமாயிருந்தால் அலிக்குழந்தையை அடைவர்.

பெண்ணின் கருவறை ஆரோக்கியமாயிருந்து கருமுட்டை திடமாயிருந்தால் சதிபதிகள் கூடிப்புணர்ந்த ஐந்தாம் நாள் கருப்பையில்

முட்டையுடன் சுக்கிலம் கலந்து ஒரு குமிழி உண்டாகும். பதினான்காம் நாள் தசையால் உருவாகும். ஒரு மாதத்தில் பஞ்ச பூதங்களின் (தீ, வாயு, ஆகாயம், பூமி, நீர்) சேர்க்கை அதில் ஏற்படுகிறது. 2–வது மாதத்தில் தோல் உண்டாகிறது. மூன்றாவது மாதத்தில் நரம்புகள் உண்டாகின்றன. முடியும், வடிவமும் ஏற்படுவது நான்காவது மாதத்தில். ஐந்தாவது மாதத்தில் காதுகளும், மூக்கும், மார்பும் தோன்றுகின்றன. ஆறாவது மாதத்தில் கழுத்தும், தலையும் ஏற்படும். ஏழாவது மாதத்தில் ஆண்–பெண் இனக்குறி தோன்றும். எட்டாவது மாதத்தில் எல்லா அவயவங்களும் பரிபூர்ணமாகி விடும். சிசுவின் உடலில் உயிர் செலுத்தப்படுகிறது.

ஒன்பதாம் மாதம் சுழுமுனை என்கிற நாடியின் மூலத்தை சிசு அடைகிறது. பத்தாம் மாதம் தன் பிஞ்சுக்கால்களால் உதைத்து உதைத்து கருவறைக் கதவைத் திறப்பதால் தாய்க்கு பிரசவ வலி ஏற்படுகிறது.

அன்னையின் கருவில் இருக்கும் போதே உயிருக்கு ஆயுளும், கல்வி, யோகம் ஆகியவைகளும், எந்த நேரத்தில் எந்தவிதமாக இறப்பு நேரிடும் என்பதும், முன் ஜென்ம பாப, புண்ணியங்களுக்கேற்ப கர்ம வினைகளும் ப்ரம்மனால் எழுதப்பட்டு விடுகிறது. பூர்வ ஜென்மத்தில் செய்த கர்ம வினைகளின் பயனையே ஜீவன் மறுபிறவியில் அனுபவிக்கிறது என்பதில் கொஞ்சமும் சந்தேகமில்லை!

கருடா! உன் மூலம் உலகத்தவர்களுக்குப் பிறப்பின் ரகசியத்தைச் சொன்னேன்.”

## 7. யமபட்டண அமைப்பு!

“ஐயனே! யமபட்டணம் செல்லும் பாதையைப் பற்றியும், எமலோகத்தைப் பற்றியும் விரிவாகச் சொல்லியருள வேண்டுகிறேன்” என்று அடுத்த வினாவை எழுப்பினார் விநதா புத்திரர்.

“சுபர்ணா! யமபுரிக்குச் செல்லும் மார்க்கம் சிறிது தூரம் வரை கனலைக் கக்கிக் கொண்டிருக்கும். அதற்கப்பால் சிறிது தூரம் வரை முட்களும், தீக்கொள்ளிகளும் நிறைந்திருக்கும். அதற்கடுத்து கொஞ்சம் தொலைவு தாங்க முடியாத, உடலை வாட்டும், குளிராக இருக்கும்.

பூலோகத்திற்கும், யமபுரிக்கும் உள்ள தூரம் 86000 காதவழி என்பதை மீண்டும் நினைவுபடுத்துகிறேன். பாவிகளுக்கு அந்த வழி நெடுகிலும் களைப்பாற நிழலும், தாகத்துக்கு நீரும் கிடைக்காது. அந்த மாதிரி தீயவர்களுக்கு அந்த வழி, செல்வதே தண்டனையாயிருக்கும்.

யமலோகம் வஜ்ரம் போல் உறுதியானது. தேவ, அசுரர்களால் கூட அதை சிதைக்க முடியாது. அந்த லோகத்தின் மத்தியில் யமனது வாசஸ்தலம் இருக்கிறது. அந்த அரண்மனை சதுரவடிவாக நூறு யோசனை பரப்பளவுள்ளதும், 25 யோஜனை உயரமானதாகவும் இருக்கும், அந்த மாளிகையில் ஏகப்பட்ட சன்னல்கள் (சாளரங்கள்) அமைந்திருக்கும். துகிற் கொடிகளாலும், முத்துச் சரங்களினாலும், தோரணங்களால்லும் அந்த மாளிகை அலங்கரிக்கப்பட்டிருக்கும்.

வைரங்களிலான தூண்கள் பளபளக்கும். அங்கேயிருக்கும் ஒரு அற்புதமான மண்டபத்தில் ஆடலும், பாடலும் இடைவிடாது நடக்கும். அங்கே யமகிங்கரர்கள் கரங்குவித்தபடி வணக்கத்துடன் நின்றிருப்பர். அவர்கள் நடுவில் பயங்கரமான தோற்றத்துடன் யமதர்மன் அமர்ந்திருப்பான். ஆனால் தன் பெரிய மீசையை நீவி விட்டபடி ஆனந்தமாக 'ஆஹா' ஹாரம் செய்வான்.

யமனது மாளிகைக்கு அருகே சித்ர குப்தனின் அரண்மனை இருக்கிறது. அது 25 யோஜனை நீளமும், அதே அளவு அகலமும் கொண்டது. உயரம் பத்து யோஜனை. அதிலும் நவரத்தின, தோரண அலங்காரங்கள் உண்டு. அங்கேயிருக்கும் ஒரு திவ்யமான மண்டபத்தில் சித்திரபுத்திரர் அமர்ந்து சகல ஜீவன்களின் பாப–புண்ணிய கணக்குகளை எழுதிக் கொண்டிருப்பார். அவர் கணக்கில் இது வரை எந்தத் தவறும் ஏற்பட்டதில்லை.

அந்த சித்ரகுப்தனுடைய மாளிகையைச் சுற்றி கொடிய வியாதிகள் வாழும் கிரகங்கள் இருக்கின்றன. கிழக்கில் கொதிக்கும் காய்ச்சலுக்கும், தெற்கில் வைசூரி, சூலை நோய் போன்ற கொள்ளை நோய்களுக்கும். மேற்கில் கால பாசத்தோடு கூடிய வயிறு சம்பந்தப்பட்ட ரோகங்களுக்கும் வடக்கே குடல் நோய்களுக்கும், தென்கிழக்கே, வலிப்பு, மயக்கம் போன்றவற்றிற்கும், தென்மேற்கே அதிசாரம் எனப்படும் மிகுந்த பேதி, காலரா போன்ற வியாதிகளுக்கும், வடமேற்கில் ஜன்னிக்கும், தனித்தனியே மனைகள் உண்டு. அந்த ரோகங்களெல்லாம், யமதர்மனுடைய உத்தரவை எதிர்பார்த்துக் காத்திருக்கும்.

வைநதேயா! யமபுரியில் பாவிகளுக்குத் தண்டனைகள் நிறைவேற்றும் விதத்தைக் கேள். யமன் மாளிகையின் தென்புறத்தே யமதூதர்கள் உலக்கையால் அடித்து இம்சிப்பார்கள். சிலர்பாவிகளை கூரிய

முட்களிலானர் ஆயுதங்களால் துன்புறுத்துவர். சிலரைக் கத்தியால் சிதைக்கிறார்கள். சிலரைச் செக்கிலிட்டு ஆட்டுகிறார்கள். சிலரை இரும்புக் கம்பிகளில் கோர்த்து அக்கினிக்குழியில் வாட்டுவார்கள். சிலரை கொதிக்கும் தாமிரக்குழம்பில் வேகவைப்பர்.

கருடனே! அங்கு தாமிரத்திலான ஆண், பெண் பிரதிமைகள் நெருப்பிலிடப்பட்டுத் தகதகத்துக் கொண்டிருக்கும். மாற்றான் மனைவியரை, கன்னியரை பலவந்தப்படுத்தியவனை யமகிங்கர்கள் இழுத்துச் சென்று பெண் பதுமைகளோடு ஒட்ட வைத்து விடுவார்கள். "சுகமாயிருக்கிறதா?" என்று ஜீவன் துடித்து அலறும்போது நையாண்டியும் செய்வர்.

அதேபோல் கணவனை வஞ்சித்த மாதரும், திருமணம் முடிக்கு முன் கெட்டுப் போனவர்களும் ஆண் பதுமையோடு ஒட்டிக்கொண்டு பிரிய முடியாமல் கதறுவார்கள். இந்தக் கொடிய தண்டனையை மரணம் நடந்த வீட்டில் இதைப் படிக்கக் கேட்ட பிறகாவது மானிடர் நல்லொழுக்கத்தோடு வாழ வேண்டும்.

கச்யப குமாரா! இன்னும் கேள். சில தீய ஜீவன்களை கரும்பாலையில் இட்டு சாறு பிழிவர். இன்னும் சிலரை மலம், சிறுநீர், கோழை முதலியன நிரம்பிய நரகக் குழிகளில் தள்ளி ஜீவன்கள் தலைதூக்கி எழும்போ தெல்லாம் குத்தித் தள்ளுவார்கள். கழிவுகளில் உற்பத்தியாகும் கொடும் பாவியரான புழுக்கள் இவர்களின் வாயிலும், மூக்கிலும், காதிலும் புகுந்து கஷ்டப்படுத்தும். அந்தக் குழியின் தரையும், சுற்றுச் சுவர்களும் மேடும், பள்ளமுமான பாறைகள்.

பெற்றோர் படிக்க அனுப்பியும் படிக்காமல் சோம்பேறியாகத் திரியும் கசடர்களும், கன்றுக்குப் பால் விடாமல் ஒட்டக் கறப்பவர்கள், சுற்றத்தினர் பசித்திருக்க தாம் மட்டும் சுகபோகமாய் வாழ்ந்தவர்கள், கூலியைக் குறைத்துக் கொடுத்தவர்கள், பில்லி, சூனியம் வைத்துப் பிறர்குடியைக் கெடுத்தவர்கள், துணைக்கு வருவதாகச் சொல்லி எந்த விதத்திலாவது மோசம் புரிந்தவர்கள், நதி நீரில் சிறுநீர் கழித்து, துப்பி அசுத்தம் செய்த பாவியர், நிர்வாணமாய் நீராடுவோர், தாசி வீடே கதியென்று கிடப்பவர், மனைவியைப் பிள்ளைகளை சித்திரவதை செய்பவர், ஒட்டுக்கேட்டு கோள்மூட்டி குடும்பத்தில் சண்டையை உண்டாக்கியவர், கணவனை இளக்காரம் செய்பவர், நெல்லை உலர்த்தாமல் விற்பவர்கள் இவர்களின் உச்சந்தலையில் ஆணி அடிப்பார்கள். தாகம் என்றால் ஈயத்தை உருக்கி

வாயில் ஊற்றுவார்கள். இதனால் சில ஜீவன்களுக்குக் கண்விழி தெறித்து விழுந்து விடும். அப்போதும் கிங்கரர்கள் பிடரியில் குத்துவர்.

முன்னூறு காதம் அகலமாயிருக்கும் முள்காட்டில் போட்டிழுப்பார்கள். (ஒரு யோசனை—நூறு மைல்) யமதூதர்களால் பாவிகள் படும் துயரங்களை சொல்லி மாளாது. அதனால் உயிரோடிருக்கும் போதே தான தருமங்கள், தீர்த்த யாத்திரை, நேர்மையான வாழ்க்கையோடிருந்து யம தண்டனை யிலிருந்து தப்ப வேண்டும்.

* * *

## 8. தான, தருமங்களின் சிறப்பு

கிருதயுகத்தில் மகாதவம் செய்வதே உத்தமமாக இருந்தது. திரேதாயுகத்தில் தியானம் செய்வது சிறந்ததாகக் கருதப்பட்டது. துவாபர யுகத்தில் யாகங்கள் செய்வது மேன்மையாக இருந்தது. கலியுகத்தில் தான தருமங்களே புண்ணியத்தைக் கொடுக்கும். இல்லறவாசி எல்லா யுகங்களிலும் வேள்வி நடத்துவதும், கோயில், குளம், சத்திரம் இவற்றை சீர்திருத்துவதும், உண்டாக்குவதும், சீராக நடைபெற உதவுவதும், அதிதி உபசாரம் புரிவதும் பாவங்களை அழித்து புண்ணியங்களை வளர்க்கும்.

இல்லறவாசி தனது தாயாதிகள் எவராவது மரணமடைந்தால் அவருக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டியது மிகவும் முக்கியமானது. இறந்தவர் அந்த நீரைப் பெற்று மகிழ்வார். மடிந்தவருக்குக் கர்மா நடத்துபவர் பஞ்சணையில் படுத்து உறங்கக் கூடாது. மரணமடைந்தவரின் நற்குணங்களை எடுத்துரைக்க வேண்டும். யம ஸ்தோத்திரமும் சொல்ல வேண்டும்.

இறந்தவனுக்கு அவனைக் குறித்துப் போடும் பிண்டங்களாலேயே சரீரம் ஏற்படுகிறது. எனவே மரித்தவனுக்காக பத்து நாட்களுக்குக் கர்மாக்களைத் தவறாமல் முறைப்படி செய்வது அவசியம்.

பத்து நாள் கிரியைகளைச் செய்யாமல் விட்டால் மரணமடைந்தவன் பிண்ட சரீரம் கிடைக்காமல் வருந்துவான். இறந்து போன ஜீவன் மூன்று நாட்கள் நீரிலும், மூன்று தினங்கள் நெருப்பிலும், மூன்று நாட்கள் வான வெளியிலும், ஒருநாள் தான் வசித்த வீட்டிலும் ஆவியுருவில் வாழும். அந்த ஆத்மாவுக்காக 1,3,5,7,9,11 ஆகிய தினங்களில் 'நவசிரார்த்தம்' என்ற கர்மாவை நடத்த வேண்டும். முதல்நாள் இறந்தவருக்காக எந்த இடத்தில்

தர்ப்பணம் முதலானவை செய்யப்பட்டதோ அதே இடத்தில் தான் மற்ற ஒன்பது நாட்களுக்குரிய கர்மாக்களையும் நடத்த வேண்டும்.

மாண்டவருடைய குலம், கோத்திரத்திற்கு விதிக்கப்பட்டுள்ள 'ஆசௌசம்' எனப்படும் தீட்டு எத்தனை நாட்களுக்கு விதிக்கப்பட்டி ருக்கிறதோ அத்தனை தினங்களும் அவனுக்காக பிண்ட தர்ப்பணம் செய்ய வேண்டும். இது ரொம்ப அவசியமானதாகும்.

ஒருவர் எந்தத் திதியில் இறந்தாரோ, அந்தத்திதியில் தான் மாசிகம் எனப்படும் மாத சிரார்த்தத்தை நடத்த வேண்டும். ஒருவர் அதிக வருத்தத்துடன் இறந்து போயிருந்தால் அவருக்கு ஏகோதிஷ்ட சிராத்தம் என்ற கர்மாவை விசேஷமாகச் செய்ய வேண்டும். அப்படிச் செய்வதால் மரித்த ஜீவனின் வருத்தம் நீங்கி சந்தோஷமடையும்.

## 9. தீட்டு

இறந்தவருடைய தாயாதிகளுக்கு பத்து நாட்கள் தீட்டு உண்டு. மரித்தவருக்குச் செய்ய வேண்டிய கிரியை முடிந்த பிறகு, மூன்று மாதங்களுக்குள் ஒரு தாயாதி, மரணமடைந்த செய்தியைக் கேட்க நேரிட்டால் அவருக்கு மூன்று தினங்கள் தீட்டு உண்டு.

மூன்று மாதங்களுக்குப் பிறகு ஆறுமாதங்களுக்குள் தாயாதி இறந்த செய்தியைக் கேட்க நேரிட்டால் ஒரு நாள் மட்டுமே தீட்டு உண்டு. ஒரு வருடம் கழித்து மாண்ட செய்தியைக் கேள்விப்பட்டால் குளித்தால் தீட்டு போய் விடும். இந்த நியமம் எல்லா வருணத்தாருக்கும் பொருந்தும்.

யாராயிருந்தாலும் அன்னதானம் செய்யும் போது தன் கைகளினால் செய்ய வேண்டும். மற்றவருக்கு இப்பணியை விட்டுத் தரலாகாது."

"வாசுதேவா! ஈமக்கிரியை செய்யும் முறை பற்றி விளக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார் கருடாழ்வார்.

"வைநதேயா! மடிந்தவருடைய பெற்றோர் உயிரோடு இருந்தால் அவர்களுக்கு மேலேயுள்ள மூன்று தலைமுறை பிதுர்க்களின் பிண்டத்தோடு மரணமடைந்தவரின் பிண்டத்தைச் சேர்க்க வேண்டும். அப்படிக் கூட்டுவதை இறந்தவனின் குமாரன் நடத்த வேண்டும். மரித்தவரின் மைந்தன் சிரார்த்தம் கொடுத்தால் அந்த ஜீவன் மகிழ்ந்து சந்ததிகளை ஆசீர்வதிக்கும். சிலருக்கு அடுத்த ஆண்டுக்குள் சந்தான பாக்கியம் கிட்டும். பிதுருக்களைத் திருப்திப்படுத்துவது சம்சாரிகளுக்கு அத்தியாவசியமானது.

உயிர்உடலை விட்டுப் பிரிகையில் அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி ஆகிய ஐந்து நட்சத்திரங்களாயிருப்பின் இறந்தவனுக்கு உடனடியாகக் கர்மா நடத்த முடியாது. இறந்தவன் உயிர்நீத்த நக்ஷத்திரங்கள் கழிந்த பிறகே கிரியைகளைச் செய்ய வேண்டும்.

இவர்கள் புண்ணியவான்களாய் இருந்தால் நிச்சயம் நற்கதி அடைவார்கள். ஆனால் எள்ளும், நெய்யும் பாத்திரத்தோடு தானம் கொடுக்க வேண்டும்.

தேகத்திலிருந்து ஜீவன் பிரிந்ததென்று அறிந்தால் சவத்தின் கால்களின் கட்டை விரல்களையும், கைகளையும் கட்ட வேண்டும். பிணத்தைத் தனியே விடாமல் அருகில் உறவினர்கள் இருக்க வேண்டும். சவம் கிடக்கையில் வீட்டிலுள்ளவர் தாம்பூலம் தரிக்கலாகாது. எந்த ஆணும், பெண்ணும் சம்போகம் செய்யக் கூடாது. உறவில்லா விட்டாலும் இதெல்லாம் மகாபாவத்தைச் சேர்க்கும்.

ஒரு சவம் கிடந்தால் அந்த வீதியிலுள்ளவர் உணவருந்துவது பாபம். அந்த உடல் மயானத்தில் அடக்கம் செய்யப்பட்ட பிறகே நீரையும் அருந்தலாம் என்கிறது சாஸ்திரம். அப்படி உணவருந்தினால் அது இறைச்சி சாப்பிட்ட தோஷத்தை உண்டாக்கும்.

சாஸ்திர நெறி தவறி செய்யப்படும் கிரியைகள் அந்த வம்சத்தினருக்குக் கஷ்டத்தையே கொடுக்கும்.''

## 10. தீர்த்தயாத்திரை

''பரந்தாமா! ஒருவர் க்ஷேத்ராடனம் செய்வதால் என்ன பலன்? அந்த சமயம் அவருக்கு மரணம் நேரிட்டால், அதனால் விளையும் விதி முறைப்பற்றியும் அறிந்து கொள்ள ஆசைப்படுகிறேன்'' என்று கேட்டார் கருடன்.

''சுபர்ணா! ஒருவர் அகமும், புறமும் தூய்மையாக வாழ்ந்து, நாக்கு ருசிக்கு பிரதானமளிக்காமல் நியமத்தோடு தர்ப்பணம், சிரார்த்தம் கொடுத்து, என்னையே தியானித்துக் கொண்டு உயிரை விடுவானேயாகில் அவன் சந்தேகமின்றி வைகுண்ட வாசம் செய்வான். அப்படி அவன் கடைபிடிக்கும் நெறிக்கு ''பிரயோப வேசம்'' என்று பெயர்.

ஒருவர் எத்தனை நாட்களுக்கு இந்த நெறிமுறைகளைக் கடை பிடிக்கின்றாரோ அத்தனை காலம் யாகம் நடத்தியபலன் அவருக்குக்

கிடைக்கும். சிலர் மாயையை உணர்ந்து இறுதிக் காலத்தில் இந்நெறியைப் பின்பற்றுவர்.

ஒருவர் பிரயோபவேசம் செய்த பிறகு மீண்டும் இல்லறத்தில் புக விரும்பினால் சான்றோர் ஒருவர் மூலம் பிராயசித்தம் செய்த பிறகே சம்சார வாழ்க்கையை மேற்கொள்ளலாம்.

ஒருவன் சன்னியாச ஆசிரமத்தை ஏற்று நியமமாக இருந்து மாண்டுபோனால், அவன் துறவியான நாள்முதல் சமாதியான நாள் வரை தினமொன்றுக்கு இரண்டு வேள்விகள் நடத்திய பயனை அடைவான்.

ஒருவர் பிணியினால் வேதனையுற்று, தனக்கு அந்திம காலம் நெருங்கி விட்டதை உணர்ந்து சன்யாசத்தை மேற்கொண்டு நெறிமுறைகளோடு வாழும்போது வியாதி குணமாகி மீண்டும். இல்லறத்தில் புகுந்தால் அவன் மகாபாவியாவான். அது கேவலமான செயல்.அவன் தந்திரும் அறிந்தும் அவனோடு பழகுகின்றவர்களும் அவன் பாபத்தில் பங்கு பெறுகிறார்கள்.

ஒருவன் பற்றற்றுத் தனியாக தீர்த்த யாத்திரை செய்தால் அவனுக்கு பிரம்மாதி தேவர்களெல்லாம் வேண்டிய ஒத்தாசைகளைச் செய்வார்கள். ஒரு திவ்ய க்ஷேத்திரத்தில் ஒருவன் மரணமடைந்தால் அவன் சொர்க்கத்தை அடைகிறான். ஒருவன் ஒரு புண்ணிய ஸ்தலத்தில் தன் உயிரை விட்டு விடத் தீர்மானித்து அந்த க்ஷேத்திரத்தில் நீண்ட காலம் வாழ்ந்த பிறகு, அங்கு ஜீவன் பிரியாமல், சிறிய பாபத்தின் பலனாய் வேறு ஒரு இடத்தில் இறந்து விட்டால், அவன் மறு ஜென்மத்தில் காவிரிக் கரையில் ஒரு வைதீக குடும்பத்தில் பிறந்து, சகல சாஸ்திரங்களிலும் வல்லவனாகத் திகழ்ந்து, நல்ல ஒழுக்கத்துடன், தெய்வ, குருபக்தியோடு வாழ்ந்து'இறுதியில் நல்லுலகை சேர்வான்.

ஒருவன் ஒரு குறிப்பிட்ட திருத்தலத்திற்குச் சென்று அங்குதான் உயிர் விடுவேன்" என்று வேத விற்பன்னர்கள் முன்பாக சங்கல்பம் செய்து கொண்டு, யாத்திரை செய்தபிறகு, தன் முடிவை மாற்றிக் கொண்டு மறுபடி தன் இல்லம் திரும்பினால் அவனும் மகாபாவி தான்!

108 திவ்ய க்ஷேத்திரங்களில் ஏதாவது ஒன்றுக்கு யாத்திரை செல்கின்றவன் தான் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடிக்கும் ஒரு கோதானம் செய்கின்ற பலனை அடைகிறான். ஆனால் ஏதாவதொரு காரணத்தால் பாதியில் வீடு திரும்பினால் அவன் திரும்பிய ஒவ்வொரு அடிக்கும் கோஹத்தி செய்த தோஷத்தைப் பெறுகிறான்.

ஆதலால் தீர்த்த யாத்திரை முழுமையாகச் செய்து, அவ்வாறு செல்லும் திருத்தலங்களில் பகவத் தியானத்திலும், பாகவத சேவையிலும் செலவிட்டு, பிரசாதங்களை பக்தியோடு உண்டு, புண்ணியத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். அதனால் அவனுடைய இல்லற வாழ்வில் செய்த பாபங்கள் அழிகின்றன.

அப்படியில்லாமல் தீர்த்தயாத்திரை செல்கையில் ஒரு பாவச் செயலை செய்து விட்டால் அதற்கு விமோசனமே கிடையாது.

வைநதேயா! ஒருவர் அன்னியருக்கு உதவி செய்து நல்ல பெயர் எடுப்பதை விட பெற்றோர், உடன் பிறந்தோர் உறவினர் ஆகியவர்களுக்கு உபகாரமாயிருப்பது சாலச்சிறந்தது.

பாடுபட்டுத் தேடிய பொருளை பலருக்கும் உபயோகமாயிருக்கும்படி செலவிடுவது மேன்மையாகும். அதைவிட்டு விதவிதமாக உண்பதும், கேளிக்கைகளில், ஆடை, ஆபரணங்களில் விரயமாக்குவதும் பாபத்தைத் தீர்க்காது. சம்சார மாய்யையில் அழுந்திக் கிடப்பவர்களைக் கண்டு காலன் எள்ளி நகையாடுவான். அவனுடைய பாபக்கணக்குகளை எழுத இடமில்லாமல் தவிப்பான் சித்ர குப்தன்.

ஒருவரிடம் மூதாதையர் விட்டுச் சென்ற சொத்து இருந்தும், மேலும் மேலும் சம்பாதித்து க்ஷேத்ராடனம் போகாமல், தான தருமம் செய்யாமல், சுற்றத்தாரின் தரித்திரத்தைக் குருடனைப் போல் காணாமலுமிருந்தால் அவன் இழி மனிதனாகிறான்.

நிலமோ, வீடோ மனிதன் கொண்டு வந்ததில்லை. எடுத்துக்கொண்டும் போக முடியாது. சந்ததியற்ற மனிதன், தத்துப்பிள்ளைக்குக் கொடுக்கிறான். அது ரத்த சம்பந்தமற்றதாக இருந்தால் எவரோ ஒருவர் பெற்ற பிள்ளைக்கு அந்த சொத்து உரிமையுடையதாகிறது. அவன் புண்ணிய காரியங்கள் செய்தால் அவனுக்கு உயர்பதவி கிடைக்கும். இம்மையிலும், மறுமையிலும் செம்மையாய் வாழ புண்ணியச் செயல்களே உதவும்."

"ஜெகன்னாதா! நித்திய சிரார்த்தம் செய்தால் இறந்தவன் நற்கதி அடைவான் என்று கூறினீர்கள்! நித்திய சிரார்த்தம் எப்படிச் செய்ய வேண்டும் என்று விளக்கினால் கிருதார்த்தனாவேன்" என்று கோரினார் சுபர்ணன்.

"வைநதேயா! இறந்தவனை எண்ணி முதல் ஆண்டில் தினமும் ஒரு சத் பிராமணனுக்கு சாப்பாடு போடுவதே நித்திய சிரார்த்தம். அன்னத்தையும், நீரையும் (தனித்தனி) இரண்டு கும்பங்களில் நிரப்பி அதை அவருக்குத்தானம் செய்ய வேண்டும். இது யம கிங்கரர்களை நித்ய திருப்தி செய்வது. ஜீவனை ஒரு கஷ்டமுமில்லாமல் சந்தோஷப்படுத்தி அழைத்துச் செல்வர்.

ஒருவன் மடிந்த 12–ம் நாளில் செத்துப் போனவனுக்காக மனக் குழப்பமின்றி (செலவாகிறதே, இது அவசியமா என்றெல்லாம் எண்ணாமல்) 12 கும்பங்களை (சொம்பு அல்லது குடம்) தானம் செய்ய வேண்டும். தரித்திரனாக இருந்தால் ஒரு குடத்தை என்னை நினைத்தும், ஒரு சொம்பை சித்திர குப்தனை எண்ணியும் தானம் கொடுக்க வேண்டும்" என்று திருமால் கூறவும்,

"மோட்சம், சுவர்க்கம் இரண்டும் வெவ்வேறா? அதை அடைய என்ன செய்ய வேண்டும்?" என்று வினவினார் கருடன்.

"மறுபடி ஜெனன மெடுக்காதிருப்பதுமோட்சம். தேவலோகத்தில் சுகித்திருப்பது சொர்க்க வாசம்.

வடமதுரா, காசி, மாயாபுரி, அயோத்தி, காஞ்சி, அவந்திகா, துவாரகை போன்ற புண்ணிய க்ஷேத்திரங்களில் ஏதாவதொன்றில் மரிப்பவன் வைகுண்டத்தைச் சேர்வான். சன்யாச ஆசிரமத்தை மேற்கொண்டு, அதை ஒழுங்காகக் கடைபிடிப்பவனும், என் மேல் பக்தி கொண்டவனும், உயிர் விடுகையில் என் நாமங்களை ஸ்மரிப்பவனும் பேரின்ப வீட்டை அடைகின்றான். துளசியைப் பயிரிட்டு கோயிலுக்குக் கொடுப்பவனும், துளசிக்கு நீர் பாய்ச்சுகின்றவனும் பாவம் நீங்கி கோலோகத்தில் ஆனந்தமாயிருப்பர். பசு, குழந்தை, சான்றோர் ஆகியோருக்கு ஆபத்து ஏற்படும்போது, தன்னைப்பற்றிக் கருதாமல் அவர்களைக் காப்பாற்று கிறவன், கடைசியில் தேவலோகத்தில் இன்பமாயிருப்பான். பூமி, வஸ்திரம், பசு இவற்றைத் தானம் செய்பவர், நீர்நிலைகளைப்பழுது பார்த்தவர்கள், ஏற்படுத்தியவர்கள், ஆலயம் எழுப்பியவர்கள், புதுப்பித்தவர்கள் பெற்ற புண்ணியத்தால் விண்ணுலகை அடைந்து ஆனந்தமாயிருப்பர். காளைக் கன்றைத்தானம் செய்தவரும், தர்ப்பையால் வீடுகட்டி மனைதானம் கொடுத்தவரும் சொர்க்கத்தில் சுகித்திருப்பர்."

# 11. ஆசௌசம்

"ஸ்வாமி! ஆசௌசம் எனப்படும் தீட்டு தொடர்பான விபரங்களைக் கூறியருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார் கருடன்.

"சுபர்ணா! ஒரு அந்தணனுக்குப்பிள்ளை பிறந்தாலும், ஒரு பிராமணன் மரணமடைந்தாலும் அவனது தாயாதிகளுக்குப் பத்து தினங்கள் தீட்டு உண்டு. தீட்டு உடையவர்கள் இல்லத்தில் தீட்டு நீங்கும் வரை ஆசௌசம் இல்லாதவர்கள் சாப்பிடுவது பாவத்தைத் தரும்.

தீட்டு உடையவர்கள் ஹோமங்களும், தேவ ஆராதனைகளும் செய்யக் கூடாது. ஒருவர் தீப்பற்றி இறந்து போயிருந்தால், கொடிய மிருகங்களால் தாக்கப்பட்டு மடிந்தால், வெளிநாடு சென்று அங்கு போய் மரணமடைந்தால் அவர்களுக்கெல்லாம் உடனே கிரியை நடத்தக் கூடாது.

அப்படி இறந்தவர்களுக்கு கர்மா தொடங்குகிற தினம் முதல் அவருடைய குடும்பத்தினர் மற்றும் உறவினர் ஆகிய அனைவருக்கும் தீட்டு உண்டு. இயற்கையாக மரணமடைந்தால் தகவல் தெரிந்தவுடன் குளிக்க வேண்டும்.

நாட்டை ஆளும் தலைவனுக்கும், வேள்விகளை நடத்தும் அந்தண ருக்கும், அவர்களுடைய தாயாதியர் இறந்தால் தீட்டு இல்லை. அதே போல திருமணக் கோலம் பூண்டவருக்கும், திருவிழா நடத்த காப்புக் கட்டிக் கொண்டிருப்பவருக்கும் தீட்டு வந்தால் அது அவர்களைச் சாராது.

பசுக்களையும், மங்கையரையும், சான்றோர்களையும் பாதுகாத்து வருகையில் பாதுகாப்பாளர் மடிந்து போனாலும், யுத்த களத்தில் ஒருவர் இறந்தாலும் அவர்களது சுற்றத்தாருக்கு ஒரு நாள் மட்டுமே தீட்டு உண்டு.

கருடா! மானிடருக்கு முதுமையில் இயல்பாக ஏற்படும் மரணம் உயர்ந்தது. வயதானாலும், நோயின் கொடுமை தாங்காமல் தற்கொலை செய்து கொண்டால் அது மகாபாவம். கடனைத் தீர்க்காமல் இறப்பதும் நரகத்தில் தள்ளும். குஷ்டரோகத்தால் அழுகிச் செத்தவன் மகா பாவியாவான். விபத்தில் அடிபட்டு ஏற்படும் மரணமும் தீயதே.

மிருகங்களால் வதைபட்டு மாண்டு போனாலும் நற்கதி கிடைக்காது. துர்மரணம் அடைந்தவர்களின் தீட்டு எவரையும் பற்றாது. துர்மரணம் அடைந்தவன் அந்தணனாயிருப்பின் ஆறுமாதங்களுக்குப் பிறகும், க்ஷத்திரியனாக இருப்பின் இரண்டு மாதங்களுக்குப் பின்பும், வணிக

குலத்தவராக இருப்பின் 15 தினங்களுக்குப் பிறகும், நான்காம் வர்ணத்தவராக இருப்பின் இறந்த உடனேயும் அவரவருக்குரிய கிரியைகளைச் செய்ய வேண்டும்.

துர்மரணம் அடைந்தவருக்கு கங்கை போன்ற புண்ணிய நதி தீரத்திலாவது, நைமிசாரண்யம், புஷ்கரம் போன்ற க்ஷேத்திரங்களிலாவது, அரச மர நிழலிலாவது, மாட்டுக் கொட்டிலிலாவது, எதுவுமே இயலாவிடில் வீட்டிலாவது நாராயண பலியைச் செய்ய வேண்டும்.''

"நாராயண பலி என்றால் என்ன?'' என்று கேட்டார் கச்யப புத்திரர்.

"வேதமந்திரங்களால் பகவானைத் துதித்து ஆராதனை செய்வது. தெற்கு நோக்கி, "சங்கு, சக்கர தாரியே! நீங்களே என்றும் நிலைத்திருப்பவராகவும், எங்கும் நிறைந்திருப்பவராகவும், திவ்ய, மங்கள, விக்கிரக, அனந்த கல்யாண, குண, விஸ்வ ரூபியாகவும் இருக்கின்றீர்! ஸ்வாமி! இறந்து போனவருக்குத் தாங்கள் தான் நற்கதி கொடுத்தருள வேண்டும்'' என்று என்னைப் பிரார்த்திக்க வேண்டும். பக்தியுடன் வேதியர்களுக்கு அன்னமிட்டு, நவதானியங்களை தானம் செய்ய வேண்டும். பிண்டதர்ப்பணமும் கொடுக்க வேண்டும்.

மறுநாள் மும்மூர்த்திகளுக்கும், யமனுக்கும் பிரதிமைகள் செய்து மேற்கு திசையில் என்னை (விஷ்ணு) யும், கிழக்கில் பிரம்மாவையும், வடக்கில் ருத்ரனையும், தெற்கில் யமனையும், நடுவில் இறந்தவனின் பிரதிமையை வைத்து பூஜை செய்ய வேண்டும். அங்கே ஐந்து கும்பங்களை வைத்து, அலங்கரித்து மேலே குறிப்பிட்ட ஐந்து தேவர்களையும் நினைத்து, சிராத்தம் பண்ணி, பிண்டம் வைத்து, எட்டு வகையான தானங்களைக் கொடுக்க வேண்டும். ரிக்வேதம் ஓதியவருக்கு பயிர் விளைந்த நிலத்தைப் பூமி தானமாகவும், யஜுர் வேதம் ஓதியவருக்கு கன்றுடன் கூடிய பசுமாட்டையும், சாமவேதம் ஓதியவருக்கு சம்பா நெல்லும் தானம் செய்ய வேண்டும்.

இறந்தவனைப் போல் 360 பலாச இலைக் காம்புகளால் பிரதிமை செய்து, அதற்கு தாமரைப்பூ, தாமரைத்தண்டு, எள், வாழைப்பழம், தேங்காய் ஆகியவற்றால் அலங்கரித்து, சந்தனமிட்டு, பூ சாற்றி சாஸ்திர முறைப்படி கிருத்தியங்களைச் செய்ய வேண்டும். இதை நிறைவேற்றினால் துர்மரணம் அடைந்தவர் நற்கதி அடைவார். இப்படிக் கர்மா செய்தவருக்குப் பத்து நாட்களும், மற்ற தாயாதிகளுக்கு மூன்று நாட்களும் தீட்டு உண்டு.

சுபர்ணா! வாழும் போதும், மடிந்தபிறகும் ஒரு ஜீவன் இன்ப,

துன்பங்களை அடைவதற்கும், பெறுவதற்கும் அந்த ஜீவன் செய்த நன்மை, தீமைகளே காரணம்.

தற்கொலை செய்து கொள்வதால் பாவம் அதிகமாகுமே தவிரக் குறையாது. மறுபிறவியில் இன்னும் மிகுதியாக வேறு விதத்தில் அனுபவித்தே தீரவேண்டும். பல பிறவிகளில் அனுபவித்தும் மிச்சமான தீவினைகள் கீழ்க்கடையனாக தரித்திரனாக, மூடனாகப் பிறக்க வைக்கிறது.

சத்தியம் பேசுவதும், சத்தியமாய் நடந்து கொள்வதும் பெரும் புண்ணியம். தானங்களில் பூதானம் சிறந்ததாகும். கோதானம், சொர்ணதானம் இவற்றைச் செய்தவர்களுக்கு பரமபதம் நிச்சயம்.

தானம் கொடுத்த நிலத்தைத் திரும்பப் பெறுவது மகா நரகத்தில் தள்ளும். தானம் கொடுத்த நிலத்தில் விளைவதைத் தானம் பெற்றவன் அனுபவிக்க முடியாமல் கெடுப்பவன், பிரளய காலம் வரை நரகத்தில் அழுந்திக் கிடப்பான். பொய் சொல்வதும், பொய் பத்திரங்களைத் தயாரித்தலும் எண்ணைக் கொப்பரையில் வேக வைக்கும்.

ஒருவர் செய்யும் தொழிலைக் கெடுப்பவர், ஆயிரம் பசுவதை செய்த பாவத்தை அடைவார். ஒருவர் வாழ உத்தியோகத்தைக் கொடுத்தவர், ஒரு லட்சம் கோதானம் செய்த பலனை அடைவார்.

ஒருவர் ஒரு பசுவைக் கொன்று விட்டு அதன்பிறகு நூறு பசுக்களைத் தானம் செய்தாலும், கோஹத்தி அவரை விடாது.

நல்ல ஒழுக்கத்தோடு வாழ்ந்து, வேதம் கற்றவரை வழிபட்டு, அவர்களது யாக, தர்ப்பண, பூசனைக்கு சிறிதும் இடைஞ்சலாயிராமல் வாழ்ந்தால் அவன் அஸ்வமேத யாகப்பலன்களை அடைகிறான். தானம் கொடுத்த வஸ்துவை எக்காரணம் கொண்டும் பறிக்கக்கூடாது.

அப்படி அபசாரப்பட்டவர்கள்தான் மலக்கிருமிகளாய் உழல்கிறார்கள். கபடமாக சினேகித்து எந்தவொரு உடைமையையும் கவர்ந்து கொண்டால் ஆயிரம் ஆண்டுகள் நரக வேதனைகளால் துன்புறுவான்.

தெய்வத்தின் பொருளை ஆக்கிரமித்தாலும், வேதியரது உடைமையை பறித்துக் கொண்டாலும், பெரியவர்களை அவமதித்தாலும் அவர்களின் குலம் நசித்து விடும். நற்குணங்களைக் கொண்ட சிரௌதிகளுக்குத் தானம் செய்தால் பலன் பலமடங்காகப் பெருகும்.

தைமாதப் பிறப்பன்று தானம் செய்தால் சூரிய லோகத்தில் வாசம் செய்வான். தானம் பெற்றவர் காயத்ரி ஜபம் செய்வதாலும், தீர்த்த மாடுவதாலும் தானம் பெற்ற தோஷத்தைக் கழிக்கலாம்.

## 12. ஸூதகமும், ஆசௌளமும்

ஏழுதலைமுறை வரை பங்காளித்துவம் உண்டு. தாயாதிகளுக்கு ஸபிண்டர்கள் என்று பெயர். அவர்களுக்கு பிரசவத்தினால் ஏற்படும் தீட்டு சூதகம் எனப்படும். இறந்தால் உண்டாகும் தீட்டுக்கு ஆசௌளசம் என்று பெயர்.

சூதக சமயத்திலும், ஆசௌளச காலத்திலும் ஸ்நானம், சந்தியா வந்தனம் தவிர பஞ்சாக்ஷரி, ஹோமம், தானங்கள், சூர்ய நமஸ்காரம், தெய்வ ஆராதனை எதுவும் செய்யக் கூடாது.

இரத்த சம்பந்தப்பட்டவர்களுக்கு தீட்டு பொதுவானது. ஸூதகம் தெரியாதபடி அந்நிய நாட்டில் இருப்பவர் யாகம், பூஜை, தானம் போன்றவற்றைச் செய்வதால் எந்த தோஷமும் வந்து விடாது. தாயார் தகப்பனாருக்கு திதி நேரத்தில் மரணச் செய்தி கேள்விப்பட்டால் அதற்கான தீட்டுக் காலம் கழிந்த பிறகே சிரார்த்தம் கொடுக்க வேண்டும். பொருட்படுத்தாமல் கொடுக்கும் திதியை பிதுர்க்கள் ஏற்பதில்லை!

### ஸூதகம் :

தாயாதிகளில் ஒருவருக்குக் குழந்தை பிறந்தால் எல்லா பங்காளி களுக்கும் ஸூதகத்தீட்டு உண்டு. நடுவில் சிரார்த்தம் வந்தால் 11–வது நாள் தீட்டு போன பிறகு கங்கா தீர்த்தம் இருந்தால் வீட்டில் தெளித்தபின் சிரார்த்தம் கொடுக்க வேண்டும்.

பிறந்தது பெண்ணானால் குழந்தையின் சகோதரர்கள், (மூத்தாள் அல்லது இளையாள் வயிற்றில் பிறந்திருந்தாலும்) அவர்களின் துணைவியர், தகப்பன், சித்தப்பா, பெரியப்பா, அவர்களின் குமாரர்கள், தந்தையின் தந்தை, பாட்டனின் சகோதரர்கள், அவர்களின் பத்தினிகள் அனைவருக்கும் பத்து தினங்கள் தீட்டு உண்டு.

பிரசவித்தவளின் பெற்றோருக்கு மூன்று தினங்கள் தீட்டு. பிரசவித்தவளின் உடன்பிறந்தவன், சிற்றப்பா, பெரியப்பா, மாமா ஆகியோருக்கு ஒருநாள் தான் தீட்டு.

திருமணமாகாத ஆண், பெண்களுக்கு பிரசவ தீட்டு கிடையாது. பிரசவித்த தீட்டை பத்து நாட்களுக்கு மேல் காக்க வேண்டியதில்லை. பிரசவித்த பெண்ணுக்கு ஆண் குழந்தையானால் முப்பது நாட்களும், பெண் குழந்தையானால் நாற்பது தினங்களும் தீட்டு உண்டு. தீட்டுக் கழிந்தபின் வளர்பிறையில் நல்ல நாள் பார்த்து மாங்கல்யக்கயிறு மாற்றிக் கொண்டு பஞ்ச கவ்யம் சாப்பிட வேண்டும். அதன்பின் தான் பாத்திரம், நீர், இவைகளைத் தொட்டு சமைக்கலாம். இதற்கு 'பாண்ட ஸ்பரிசம்' என்று பெயர்.

**ஆசௌசம்:**

பிறந்த பத்து தினங்களுக்குப் பிறகு ஆண் குழந்தை மடிந்தாலும், திருமணத்திற்கு முன் பெண் இறந்தாலும், மரணமடைந்தவரின் பெற்றோருக்கும், சகோதர்களுக்கும் பத்து நாட்கள் தீட்டு உண்டு.

உபநயனமான தாயாதிகளின் மைந்தர் இறந்தால் எல்லோருக்கும் பத்து நாட்கள் தீட்டு உண்டு. ஏழு வயது முதல் பூணூல் போடா விட்டாலும் தாயாதிகளுக்குப் பத்து தினங்கள் தீட்டு உண்டு.

தாயின் பெற்றோர், மாமன்மார், அவர்களது இல்லத்தரசியர், பெற்றோரின் மாமனார், மாமியார் (கொள்ளுப் பாட்டி, தாத்தா, தாயின் வம்சம்) அன்னையின் சகோதரிகள், அத்தைகள், ஆண் குழந்தையின் உபநயனமான அத்தை பிள்ளை, பூணூல் போட்ட தௌஹித்ரன், திருமணமான பெண், சகோதரி இவர்களுக்கு மூன்று நரட்கள் தீட்டு உண்டு.

ஒருவருக்கு ஸ்வீகாரமாய் கொடுக்கப்பட்ட நங்கை தன்னைச் சுமந்து பெற்ற அன்னை இறந்த செய்தி கேட்டால் மூன்று தினங்கள் தீட்டுக் காக்க வேண்டும். அந்தப் பெண்ணின் குழந்தை இறந்தால் பெற்றவளுக்கும் மூன்று நாட்கள் தீட்டு உண்டு. மேற்சொல்லப்பட்ட தீட்டு தந்தைக்கும் ஏற்றதாகும்.

தத்துப் புத்திரனுக்கும் இது பொருந்தும். தாயாதிகளின் புத்திரிகள் திருமணமாகாமலிருந்தால் (ஏழு வயது முதல்) மூன்று நாட்கள் தீட்டுக் காக்க வேண்டும்.

25–வது மாதம் முதல் ஆறு வயது வரை உபநயனம் ஆகாத பங்காளிகளின் குமாரர்களுக்கும் மூன்று நாள் தீட்டு உண்டு.

ஸ்தீரிகளுக்கு (ஜெனன மரணத்தீட்டு) பிறந்த வீட்டுத் தீட்டு கிடையாது.

நெருங்கிய ரத்த சம்பந்தமுள்ளவர்களானால் மூன்று நாள் தீட்டு உண்டு. அந்தத் தீட்டு அவள் கணவனுக்கு இல்லை!

பூணூல் போட்ட சகோதரன், உபநயனமான மருமான் (சகோதர சகோதரிகளின் பிள்ளைகள்) தாயாரின் சக்களத்திகள் இறந்தால் பெண்களுக்கு மூன்று நாட்கள் தீட்டு உண்டு.

அத்தையின் பிள்ளை, பெண்கள், மாமனின் குமாரர்கள், குமாரிகள், தாயின் சகோதரிகளின் புத்திரர்கள், புத்திரிகள், தன் சகோதரியின் குழந்தைகள், தன் சகோதரனின் திருமணமான மைந்தர்கள், சிற்றப்பா, பெரியப்பா பெண்கள், தனது மைந்தனின் குமாரி (பௌத்ரி) தனது பெண்ணின் பெண் (தௌஹித்ரி) பூணூல் போடப்படாத தௌஹித்ரன் (பெண்ணின் பிள்ளை) மருமான் ஆகியோர் இறந்தால் ஆண்கள் ஒன்றரை நாள் தீட்டைக் கடைபிடிக்க வேண்டும்.

## ஸ்த்ரீகளுக்கு பக்ஷிணீ தீட்டு (1 1/2 நாள்)

1. தந்தையுடன் பிறந்த பெரியப்பா, சித்தப்பா.
2. தன் தாயுடன் பிறந்த பெரியம்மா, சித்தி.
3. மாமா/ அத்தை
4. அவர்களின் பிள்ளைகளும், பெண்களும்.
5. தந்தையின் தந்தை (பிதாமஹர்)
6. தந்தையின் தாய் (பிதாமஹீ)
7. தாயின் பெற்றோர் (மாதா மஹர், மாதாமஹீ)
8. உடன்பிறந்த சகோதரி, அவளது பெண்; மருமகள் ஆகியோர் இறந்தால் ஒன்றரை நாள் தீட்டு, பகலில் சாப்பிடாமலிருந்தால் இரவில் தீட்டு அகலும். பகலில் சாப்பிட்டால் மறுநாள் காலையில் தான் தீட்டு போகும்.

## ஆடவர்களுக்கு ஒருநாள் தீட்டு.

1. தந்தையின் இளையாள் அல்லது மூத்தாளின் சகோதரன், சகோதரனின் வாரிசுகள், அவர்களுடைய சந்ததியினர்.
2. தன் பத்தினியின் உடன் பிறந்தார். (மைத்துனர்)
3. தாயின் சக்களத்திகளின் பெற்றோர்.

4. இரண்டு வயது முதல் ஆறு வயது வரை திருமணமாகாமல் இறந்த பங்காளிகளின் புதல்வி.
5. ஸ்வீகாரம் சென்றவனுடைய பூர்வ கோத்ர சகோதரன்.
6. மனைவி இறந்து, அவளுக்குக் குழந்தை பிறக்காதிருந்து அவளது பெற்றோர் இறந்தால்,
7. ஆறு மாதம் முதல் இரண்டு வயது வரையுள்ள பங்காளி பிள்ளைகளுக்கு ஒரு நாள் தீட்டு கடைபிடிக்க வேண்டும்.

### மங்கையருக்கு மட்டும் ஒரு நாள் தீட்டு

1. தாயின் மூத்தாள் அல்லது இளையாள் சந்ததி.
2. தாயின் சக்களத்தியுடைய உடன் பிறந்தோர்.
3. அவர்களின் பேரன், பேத்திகள்.
4. அன்னையின் சக்களத்தியுடைய, சகோதரர்களின் வாரிசுகள். இவர்களில் விவாகம் ஆகாவிட்டாலோ, பூணூல் போடா விட்டாலோ தீட்டு வராது.

### ஜெனனத் தீட்டுகள் சேர்ந்தால்

1. ஒரு பத்து நாள் பிறப்புத் தீட்டுக் காத்துக் கொண்டிருக்கும் போது நடுவில் இன்னொரு பிறப்புத் தீட்டு வந்தால், முதல் தீட்டுப் போகும் நாளிலேயே இரண்டாவது தீட்டும் போய் விடும். இது தாயாதிகளுக்கு மட்டுமே. பெற்றோர்களுக்கு இல்லை. இந்த விதி மூன்று நாள் தீட்டுக்கும் ஏற்றதே.
2. மூன்று நாள் தீட்டைக் கடைபிடிக்கையில் பத்து நாள் தீட்டு வந்தால் பத்து நாட்கள் தீட்டுக் காக்க வேண்டும்.
3. பத்து நாள் தீட்டைக் கடைபிடிக்கையில் மூன்று நாள் தீட்டு வந்தால் பத்து நாள் தீட்டுப் போகும் போதுதான் சரீரம் சுத்தி அடையும்.
4. பத்து அல்லது மூன்று நாட்கள் தீட்டைக் கடைபிடிக்கையில் ஒருவருக்குக் குழந்தை பிறந்தால் பிறந்ததிலிருந்து பத்து தினங்கள் தீட்டு உண்டு.
5. பத்தாம் நாள் முடியும் நேரத்தில் மற்றொரு பத்து தினங்கள் தீட்டு வந்தால் மூன்று நாட்கள் தீட்டுக் காத்தால் போதும்.
6. குழந்தை பிறந்து பத்து நாட்கள் தீட்டுக்காத்துக் கொண்டிருக்கையில்

பத்தாவது நாள் இன்னொரு பிறப்புத்தீட்டு வருமானால் பதினோராம் நாள் தீட்டு நீங்கி விடும். மேற்கூறியபடி மூன்று தினங்கள் தீட்டுக் காக்க வேண்டாம்.

7. ஒரு பத்து நாள் தீட்டுக் காத்துக் கொண்டிருக்கையில் தாயாதி வீட்டுப் பிரசவத்தீட்டை அறிந்தால் (பத்து தினம்) முதல் தீட்டுப் போகும் நாளிலேயே சுத்தி அடைந்து விடுவீர்கள்.

8. முதல் நாள் இரவும், மறுநாள் காலையுமாக இரட்டைக் குழந்தை பிறக்குமானால் தாய்க்கு 2–வது குழந்தை பிறந்த பதினோராம் நாளே தீட்டு போகும். பங்காளிகளுக்கும், குழந்தையின் தந்தைக்கும் முதல் சிசு பிறந்த பதினோராம் நாள் தீட்டுப் போய் விடும்.

## மரண சௌசம்

1. ஜெனனத்தீட்டின் இடையே மரணத்தீட்டு வந்தால் பிறப்புத் தீட்டுடன் இறப்புத்தீட்டு போகாது. மரணத்தீட்டுக்கு வலு அதிகம்.
2. ஆனால் மரணத்தீட்டின் இடையே பிறப்புத் தீட்டு வந்தால், ஜெனனத் தீட்டுப் போகும் போது இறப்புத் தீட்டும் விலகிவிடும்.
3. பிரசவத் தீட்டைப் பெற்றோர் கடைபிடிக்கையில் தந்தையின் பெற்றோர் மரணமடைந்தால் பிறப்புத்தீட்டோடு இறப்புத் தீட்டும் போய்விடும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.
4. சிசு பிறந்து தீட்டுக் காத்துக் கொண்டிருக்கையில் குழந்தை இறக்க நேர்ந்தால் சிசு பிறந்த 12–ம்நாள் தீட்டு நீங்கும். பத்தாவது நாள் இரவின் கடைசியில், மடிந்தால், பெற்றோர் 3 நாட்கள் தீட்டுக் காக்க வேண்டும்.
5. தாயாதி மரணமடைந்த தீட்டைக் காத்துக் கொண்டிருக்கையில் அந்தக் குல மங்கை பிரஸவித்தால், பங்காளிகளுக்கு, மரணத்தீட்டுடன் ஜெனனத் தீட்டும் நீங்கி விடும்.
6. அன்னைக்கு மட்டும் பிறந்த தீட்டு 11–வது நாளில் தான் போகும்.
7. தாயாதிகளுக்கு ஜெனன – மரணத் தீட்டுகள் சமமாக (பத்து நாட்கள் அல்லது மூன்று நாட்கள்) இருந்தாலும் சாதீட்டு போகும் நாளில் பிறப்புத் தீட்டும் நீங்கி விடும்.
8. ஜெனனத்தீட்டுக் காக்கும் தந்தைக்கு பத்துநாட்களுக்குள் சிசு

இறந்தால் மரணத்திற்காக அதிகப்படி தீட்டுக் கிடையாது. ஜெனனத்தீட்டு முடியும் நாளில் சுத்தியாகி விடுவார்.

9. பத்து தினங்கள் இறப்புத் தீட்டைக் கடைபிடிக்கையில் பத்தாம் நாள் இன்னொரு பத்துநாள் தீட்டு வருமானால் அதற்குப்பத்து நாள் தனியாகத் தீட்டுக் காக்க வேண்டாம்.

10. மூன்று நாட்கள் தீட்டில் பத்து நாள் தீட்டு வருமானால் பத்தாம் நாள் தான் தீட்டு போகும்.

11. தாயாதி இறந்த பத்து நாள் தீட்டைக் கடைபிடிக்கையில் மனைவி இறந்தால் கணவருக்கும், கணவர் மரணமடைந்தால் மனைவிக்கும், தாய், தந்தையர் இறந்தால் புத்திரர்களுக்கும், பிள்ளைகள் மரித்தால் பெற்றவர்களுக்கும், மரணமடைந்த நாளிலிருந்து பத்து நாட்கள் தீட்டு உண்டு.

12. பத்துநாள் ஆசௌசத்தில் பத்தாவது நாள் இரவில் மற்றொரு பத்துநாள் தீட்டு வந்தால் 2 நாளும், அருணோதயத்தில் செய்தி வந்தால் மூன்று நாட்களும் தீட்டுக் காக்க வேண்டும். அது மூன்று நாள் தீட்டு என்றால் நாளை நீட்டிக்க அவசியமில்லை.

13. பிதா இறந்து பத்து நாட்களுக்குள் மாதா இறந்தால் தந்தையின் தீட்டுக் காலத்திற்கு மேல் ஒன்றரை நாள் தீட்டைக் கடைபிடிக்க வேண்டும். தாயார் மடிந்த பத்து நாட்களுக்குள் தந்தை மரணமடைந்தால் தகப்பனாரின் மரண தினம் முதல் பத்து நாட்கள் தீட்டு உண்டு.

14. தாய், தந்தை மடிந்து பத்து நாட்களுக்குள் பார்யை, புத்திரன், புத்திரி எவராவது இறக்க நேர்ந்தால் தந்தை மறைந்த 11–ம் நாள் எல்லாத் தீட்டுகளும் போய்விடும்.

15. தாய், தந்தை, மனைவி, பிள்ளை, புதல்வி இவர்கள் இறந்த பத்தாவது நாளில் வேறொரு க்ஞாதி மரித்தால் முந்தைய தீட்டு போகும் தினத்தில் இந்தத்தீட்டும் போய்விடும்.

16. பத்துநாள் தீட்டினைக் கடைபிடிக்கையில் வேறொரு தகனம் செய்ய நேர்ந்தால் தகன நாள் முதல் பத்து நாட்கள் தீட்டு உண்டு. மறுபடி ஒரு தகனம் வந்தால் அதற்குப் பத்து தினங்கள் கடைபிடிக்க வேண்டாம்.

## தாமதமாக அறியும் ஆசௌசம்

1. பத்து நாட்கள் தீட்டை மூன்று மாதங்களுக்குள் கேட்டால் மூன்றுநாள் தீட்டு. ஆறு மாதங்களுக்குள் கேட்டால் ஒன்றரை நாள் தீட்டு. ஒரு ஆண்டிற்குள் கேட்டால் ஒருநாள் தீட்டு. அதன்பிறகு கேள்விப்பட்டால் ஸ்நானம் மாத்ரம் செய்யவேண்டும்.

2. மூன்று நாள் தீட்டை மூன்று நாட்களுக்குமேல் கேட்டால் ஒரு நாள் ஆசௌகம். பத்து நாள் சென்று அறிந்தால் குளியல் மட்டுமே.

3. ஒன்றரை நாள் தீட்டை பத்து நாட்களுக்குள் கேட்டால், கேட்ட நேரம் (பகலானால் பகல், இரவானால் இரவு) தீட்டு. பத்து தினங்கள் தாண்டி விட்டதென்றால் நீராடல் மட்டும்தான்.

4. பெற்றோர்களின் மரணத்தில் மூத்த பிள்ளைக்கும், பர்த்தாவின் மரணத்தில் பாரியைக்கும் எப்போது கேட்டாலும் பத்து நாட்கள் தீட்டு உண்டு.

5. மாற்றாந்தாயின் மரணத்தை ஒரு வருடம் கழித்துக் கேள்விப்பட்டால் மூன்று நாட்கள் தீட்டு. ஒரு ஆண்டிற்குள் அறிந்தால் பத்து நாட்கள் தீட்டு.

6. பெற்றோருக்கு மூத்தபிள்ளை ஈமச்சடங்குகள் செய்த பின் மற்ற மைந்தர்கள் ஒரு ஆண்டு கழித்து செய்தி அறிந்தால் மூன்று தினங்கள் தான் ஆசௌசம்.

7. மாதா-பிதாக்களுக்கு மற்ற புதல்வர்கள் இறுதிக்கடன் கழித்த போதிலும், மூத்த குமாரன் மரணச் செய்தியைக் கேள்விப்பட்ட திலிருந்து பத்து தினங்கள் தீட்டுக் காத்து ஸபிண்டீகரணம் முதலானவற்றைச் செய்ய வேண்டும்.

8. சகோதர மரணத்தில் க்ருத்யம் (சடங்கு) செய்யப்பட்டிருந்தால் ஆறு மாதங்களுக்குள் விஷய மறிந்தால் மூன்று தினங்கள் தீட்டு. ஆறு மாதங்களுக்குப் பின் காதில் விழுந்தால் ஒன்றரை நாள் தீட்டு. க்ருத்யம் நடத்தவில்லையென்றால் அதை நடத்தும் சகோதரனுக்கு பத்து நாட்கள் ஆசௌசம்.

9. பத்து நாள் தீட்டை பத்தாவது தின இரவிலும், மூன்று நாள் ஆசௌசத்தை மூன்றாவது நாள் இராத்திரியிலும் கேட்டாலும் மறுநாள் தர்ப்பணம் செய்யும் வரை தீட்டு உண்டு.

10. பூணூல் போடாதவன், திருமணமாகாதவன் இவர்களுக்குக் கர்மா செய்தால் அன்று மட்டும்தான் தீட்டு. இறுதிக்கடன்கள் கழிக்கும் போதும் தீட்டு ஏற்படும். வரைமுறை கிடையாது.

# 13. பொதுவிதிகள்

1. ஒருவருக்குத் தீட்டு உண்டு என்று தெரிந்தும் தீட்டில்லாதவர், தீட்டுடையவர் வீட்டில் சாப்பிட்டால் அன்று முழுவதும் சாப்பிட்டவருக்குத் தீட்டு உண்டு.
2. தீட்டு விலகும் தினத்தன்று எட்டரை மணிக்கு மேல்தான் ஸ்நானம் செய்ய வேண்டும்.
3. பிறப்பு, மரணம், மாதவிடாய் இதெல்லாம் இரவு ஒரு மணி வரை (சூரியோதயத்துக்கு நாலரை மணி நேரத்துக்கு முன்னர்) முதல் நாள் கணக்காக எடுத்துக் கொள்ளலாம்.
4. பிரேதத்துக்குப்பின் சென்றாலும்; க்ஷவரம் செய்து கொண்டாலும் இருமுறை நீராட வேண்டும்.
5. துறவிகள் தங்களின் பிறப்புக்குக் காரணமான பெற்றோர் மரணமடைந்ததைக் கேட்டால் உடனே ஸ்நானம் செய்ய வேண்டும். மற்ற எவராயினும் குளியல் இல்லை.
6. 88 அடிக்குள் பிணம் கிடந்தால் சமையல், சாப்பாடு கூடாது.
7. சன்யாசி இறந்து அவர் தேகம் இருந்தால் கிராமத்துக்கு தீட்டுகூடாது.
8. சடலம் இருக்கும் வீட்டுக்கருகில் வாய்க்கால் இருக்குமானால் வாய்க்காலுக்கு அப்புறம் வசிப்பவர்களுக்கு தோஷமில்லை. ஹோமம் நடந்தாலும் சஞ்சலப்பட வேண்டாம். பட்டணங்களுக்கு இந்த நிர்ணய மில்லை.
9. தீட்டு உள்ளவர் கடும் வியாதியால் தீட்டு போகும் தினத்தில் ஸ்நானம் செய்ய முடியாவிட்டால் அவருக்காக வேறொருவர் பத்து தடவை நீராடி ஆசமனம் செய்யலாம். ஒவ்வொரு தடவையும் தீட்டுள்ளவரைத் தொட்டு விட்டு ஸ்நானம் செய்ய வேண்டும். ஒவ்வொரு தடவையும் வெவ்வேறு சுத்த வஸ்திரம் தரிக்க வேண்டும். கடைசியில் புண்யாக வசனம் செய்தால் சுத்தராகிறார். அவர் வபனம் செய்து கொள்ள வேண்டியவராக இருந்தாலும் அது தேவையில்லை.

10. வீட்டு விலக்கான ஸ்த்ரீ நாலாவது நாள் நோயால் ஸ்நானம் செய்ய முடியாது போனால் இன்னொரு பெண் அவளைத் தொட்டுக் கொண்டு பன்னிரண்டு முறை நீராட வேண்டும். ஒவ்வொரு முறையும் குளிப்பவள் வேறு சுத்தமான சேலை அணிய வேண்டும். பஹிஷ்டைக் காரி சக்தியளவு குளிக்கலாம் அல்லது புண்யாக வசனத் தீர்த்தத்தைத் தெளித்துக் கொள்ளலாம்.

## ஆசௌசம் இல்லாத காலங்கள்

1. சிரார்த்தம் நடந்து கொண்டிருக்கையில் தாயாதி மரணமடைந்த (கடிதம் மூலம்) செய்தி வந்தால் திதி முடிந்த பிறகு தான் தீட்டு வரும். நடத்தி வைக்கும் சாஸ்திரிகளுக்கும் அதே விதிதான்.

2. கர்த்தா பூணூலை இடமாக மாற்றிக் கொண்டு மரணமடைந்தவரின் கோத்ரத்தையும், பெயரையும் சம்பந்தத்தையும் சொல்லி விதிப்படி "பார்வண விதாநேந அத்யகரிஷ்யே" என்று ஸங்கல்பம் செய்த பிறகு யஜமானன் ஆசௌசத்தை அறிய நேரிட்டால் சிரார்த்தம் பூர்த்தியாகும் வரை தீட்டு நெருங்காது.

   "பவதாக்ஷண: கர்த்தவ்ய:" என்ற பிறகு போக்தாவுக்கு தீட்டு தெரியுமானால் விஸர்சனமாகும் வரை தீட்டில்லை.

3. சங்கல்பமான பிற்பாடு கல்யாணத்தில் சேஷஹோமம் முடியும் வரை புதுமணத் தம்பதிகளைத் தீட்டு நெருங்காதவாறு தேவதைகள் காக்கின்றன. நடுவில் மாதாபிதாக்களின் மரணம் நேர்ந்தால் அந்தக் கர்மாவைச் செய்து விட்டு சேஷஹோமம் நடத்த வேண்டும். புதுமணத் தம்பதியரில் ஒருவர் இறக்க நேர்ந்தாலும் சேஷஹோமத்தை பாதியில் நிறுத்தக்கூடாது.

4. யாக தீக்ஷையின் மத்தியில் தாய்–தந்தையர் மரணமடைந்தால் அவர்களுக்கு வேறுபிள்ளைகளைக் கொண்டு கர்மாவை முடிக்கலாம். தீக்ஷைக்குரியவர் மட்டுமே மைந்தராக இருப்பின் மான்தோல், வஸ்திரம் முதலியவைகளைக் களைந்து விட்டு ஸம்ஸ்காரம் செய்ய வேண்டும். ஸ்நானம் பண்ணக்கூடாது.

   பிறகு வேள்விச் சாலைக்கு வந்து தீக்ஷா சாமான்களை மந்திரம் கூறி சுத்தி செய்து அணிய வேண்டும்.

# 14. இன்னும் சில முக்கியமானவை.

1. மாப்பிள்ளை மரித்தால் மாமனார், மாமியார், மைத்துனர் இவர்களுக்குத் தீட்டில்லை. வேறு கோத்திரமானதால் ஸ்நானம் மட்டும்தான்.

2. தூக்கு தண்டனை விதிக்கப்பட்டு இறந்தால் உடனே கர்மா பண்ணலாம். துர்மரணம் அடைந்தவரைப் போல் ஆறுமாதம் பொறுத்திருக்கத் தேவையில்லை.

3. சன்யாசியாகப் போன நெருங்கிய உறவினர் இறந்தால் தாயாதிகளுக்குத் தீட்டில்லை. அவபிருதமென்னும் மங்கள ஸ்நானம் மட்டுமே செய்ய வேண்டும்.

4. விபத்திலோ, எவராலாவது பகை காரணமாக கொல்லப்பட்டோ துர்மரணம் அடைபவருக்கு தீட்டு, தர்ப்பணம் எல்லாம் உண்டு. விஷம் அருந்தி (வேறு முறைகளில்) தற்கொலை செய்து கொள்பவர்களுக்கு எதுவும் கிடையாது.

5. மாற்று ஜாதிக்கு மாறியவர், புருஷனை விட்டு ஓடிப்போனவள் இவர்கள் இறந்தால் மந்திரமில்லாத தகனம் செய்து விட்டு ஆறுமாதமோ, ஒருவருடமோ கழித்து நாராயண பலி கொடுக்க வேண்டும். மூன்று நாள் தீட்டு உண்டு. இவர்களுக்கும், துர்மரணம் அடைந்தவர் களுக்கும் கர்மா செய்யா விட்டால் பீடை படுத்தும். பங்காளிகளுக்குத் தீட்டு கிடையாது. அவர்கள் ஸ்நானம் செய்தால் போதும்.

6. துர்மரணம் (தற்கொலை) அடைந்தவர்களுக்கு (விபத்து) மூன்று தினங்கள் தீட்டு காத்து 2–வது நாள் ஸஞ்சயனம், 3–வது நாள் உதக தானம், 4–வது நாள் சிரார்த்தம் செய்ய வேண்டும். கர்மா செய்பவர் 24–நாள் கழிந்த பிறகே சடங்குகளை நடத்த வேண்டும். நடுவில் தாய், தந்தை மரண திதி வந்தால் சிரார்த்தம் முடிந்த பிறகே கிரியை செய்ய வேண்டும். மற்றவர் சிரார்த்தமானால் பிந்தி செய்யலாம்.

7. திருமணமான புத்திரி இறந்தால் அவள் பிறந்த வீட்டு தாயாதிகளுக்கு ஆசௌசமில்லை.

8. ஜெனனத் தீட்டுள்ள வரை நான்கு நாட்களுக்குப் பின் தொட நேர்ந்தால் அதிக தோஷமில்லை. இரட்டைச் சிசுவானால் தகப்பனாரை பத்து தினங்கள் வரை தொடக் கூடாது. மரணத்தீட்டு

உள்ளவர் மேல் அவர் படக்கூடாது. தீண்டினால் நீராடினால் சுத்தியாகும். வேண்டுமென்று தொட்டால் பிராயச்சித்தம் பண்ண வேண்டும்.

9. ஒரு மரணத் தீட்டுள்ளவர் வேறொரு சாதீட்டுள்ளவரைத் தொடலாகாது. இறந்த தீட்டுள்ளவன் வீட்டுப் பால், நெய், நீர், தயிர், பானம் போன்றவற்றிற்கும் தீட்டுண்டு.

10. வழிப்போக்கர், நண்பர் இவர்கள் வீட்டில் பிரசவித்தாலும், இறந்தாலும் அந்த வீட்டிற்குத் தீட்டில்லை. கர்த்தா அகன்றதும் கழுவி விட்டால் போதும். ஆனால் அதே இல்லத்தில் மரித்தவரின் கிரியை நடந்தால் தீட்டு உண்டு.

11. பிரம்மசாரிகள் க்ருத்யம் செய்தாலொழிய உதககதானம் செய்யக்கூடாது.

12. விவாக தீக்ஷை, யாக தீட்சை இவைகளின் நடுவே மரணத்தீட்டு காதில் விழுந்தால் தீக்ஷை முடிந்தபின் பாக்கி நாள் தீட்டு உண்டு. தீட்க்ஷை முடிவிற்குள் ஆசௌசகாலம் கழிந்ததென்றால் பிறகு அதிக்ராந்தா சௌசமுண்டு.

13. பார்யை, கர்ப்பவதியானால் தூரதேச யாத்திரை, தானம் வாங்குதல் ஆகியவற்றை விலக்க வேண்டும்.

14. சவத்தின் முன்புறமும், பக்க வாட்டிலும் போகக்கூடாது.

15. உறவில்லாதவர் சவ ஊர்வலத்தில் கலந்து கொண்டால் குளித்து விட்டு, உலர்ந்த ஆடை அணிந்து, அக்னி மேல் கையைக் காட்டி சூடாக்கி (தூய்மையடைய) கொஞ்சம் நெய் அருந்தி, மூன்று பிராணாயாமம் செய்து, மறுபடி நீராடினால் தான் சுத்தி.

16. தாயாதியாக இல்லாதவர்கள் கர்மா தொடங்கு முன்பே ஸ்நானம் செய்யலாம். கிரியை ஆரம்பித்து விட்டால் தஹனமான பிறகுதான் குளிக்க முடியும்.

17. சஞ்சயனத்துக்குப் பின்னால் துக்கம் விசாரித்தால் ஆசமனம் செய்தால் போதும். துக்கம் விசாரித்தால் அன்று சிரார்த்தம், தானம் எதுவும் செய்யக் கூடாது. அதனால் திதியன்று துக்கம் விசாரிக்கக் கூடாது.

18. உறவில்லாத சடலத்தை பகலில் சுமந்தால் பகல் முழுவதும், இரவில் சுமந்தால் ராத்திரி முழுவதும் உபவாசமிருந்து பிறகு ஸ்நானம் செய்து பஞ்சகவ்யம் அருந்த வேண்டும். புண்யாக வசன நீர் அல்லது கங்கை நீர் தெளித்துக் கொள்ள வேண்டும். வேப்பிலையைத் தின்று உமிழ்ந்தாலும் தோஷம் நீங்கி விடும்.

19. மாதவிலக்கின் போது இறந்தவளின் பிணம், பிரஸவத்தில் மரித்தவளின் சவம், கவனிக்காது விட்ட பழைய பிணம், கர்ப்பிணி சவம் இவைகளை உறவில்லாதவர் சுமந்தால் பஞ்சகவ்யம் சாப்பிட்டு, பசுவிற்குப் புல் வாங்கிக் கொடுத்து, முடிந்த வரை காயத்ரி ஜபித்து எரியும் தீபத்தில் கையை வாட்டி, துளி நெய் அருந்தி, வேறு பூணூல் தரித்து, புண்யாக வசன நீர் அல்லது கங்கா தீர்த்தம் தெளித்துக் கொள்ள வேண்டும். அதுவரை சந்தியாவந்தனம் செய்யக்கூடாது.

20. பத்தினி கர்ப்பமாயிருக்கையில் பிணம் தூக்கக்கூடாது. தாய், தந்தை, புத்திரனில்லாத சகோதரன், பிள்ளையில்லாத மாமன் இவர்களது சவத்தைத் தூக்கினால் தோஷமில்லை.

21. திருமணமாகாதவன், பிரம்மச்சாரி, மாதா, பிதா சவங்களைத் தவிர மற்றவர் சவங்களை ஆட்களை அமர்த்தித்தான் சுமக்கச் செய்ய வேண்டும்.

22. தீட்டுக்காரர்கள் கோவில், பூஜை, ஹோமம் இவற்றில் கலந்து கொள்ளக்கூடாது.

23. தீட்டுக்காரர் தீட்டில்லாதவர்களையும், ஆசௌசம் இல்லாதவர், உள்ளவரையும் நமஸ்கரிக்கக்கூடாது.

24. ஜெனன, மரணத்தீட்டு இரண்டிலும் ஏகாதசி விரதத்தை விடக்கூடாது. பூஜை செய்யக்கூடாது.

25. சாவு தீட்டுக்காரர் தீட்டு உள்ளவரை நித்தமும் தலைக்குக் குளிக்க வேண்டும். கட்டில், மெத்தையில் படுக்கலாகாது.

26. சிசுக்கள் இறந்தால் புதைத்த தினத்திலிருந்து தான் தீட்டைக் கடைபிடிக்க வேண்டும். முதல் நாள் இரவு இறந்திருந்தால் அதைக் கணக்கெடுக்கக்கூடாது.

27. யாகம் செய்தவர் மரித்தாலும் அவரைத்தகனம் செய்த நாளைக் கணக்கிட்டே தீட்டைக் கடை பிடிக்க வேண்டும்.

# 15. குழந்தைகளின் பாபங்கள்

"குழந்தைகளுக்கு எத்தனை வயது முதல் பாவம் வரும்?" என்று கேட்டார் கருடாழ்வார்.

வைநதேயா! நான்கு வயது முதல் குழந்தைகளுக்குப் பாவம் வரும். ஆனால் 12 வயது வரை அந்தக் குழந்தை செய்யும் தீவினைகள் பெற்றோரையே சேரும்.

"திருடக்கூடாது, பொய் சொல்லக்கூடாது, பிறர் பொருளுக்கு ஆசைப்படக்கூடாது. யாரையும் அடிக்கக் கூடாது. காலையில் எழுந்து நீராட வேண்டும். தெய்வத்தை வணங்க வேண்டும். பெரியவர்களை மதிக்க வேண்டும். நன்றாகப் படிக்க வேண்டும்" என்ற அறிவுரைகளைக் கூறி வளர்க்கும் பொறுப்பிலுள்ள பெற்றோர்கள் அதிலிருந்து தவறுகையில் பாவங்கள் துன்பங்களாக மாறி அவர்களை வருத்தும்.

பெற்றோரை இழந்த குழந்தைகள் செய்யும் பாவம், ரட்சிப்பவர்களை அடையும். கடவுள் நம்பிக்கையற்றவன் மகாபாவி. அவனுக்கும் உத்தரக்கிரியை நடத்த வேண்டிய அவசியமில்லை.

இறந்து விட்ட பெற்றோருக்கு புத்திரனோ, அல்லது பாத்யப் பட்டவரோ ஆண்டுதோறும் திதி கொடுக்க வேண்டும். ஒரு தகப்பனார் தன் பிள்ளைக்கும், தமையன், தம்பிக்கும் சிரார்த்தம் செய்யும் நிலை ஏற்பட்டால் தன் தலைமுறையில் உள்ளவர்களைக் குறிக்காமல் மரித்தவரை மட்டுமே குறித்து திதி நடத்த வேண்டும்.

சிரார்த்த நாளில் தீட்டு ஏற்பட்டால் அது தீர்ந்த அன்று திதி கொடுக்க வேண்டும்.

பெற்றோருக்கு அவரது சிறிய பாலகன் சிரார்த்தம் செய்யும்படி நேர்ந்தால் சில நிவர்த்திகளை சாஸ்திரிகள் சொல்வார். அதன்படி நடத்துவதில் பாதகம் ஏற்படாது. குழந்தை கை தர்ப்பைப் புல் வாங்கி பெரியவர்கள் நடத்தலாம்.

ஒருவருடைய சுற்றத்தினர் பலர் வேறு தேசத்தில் ஒரே சமயத்தில் மடிந்தார்கள் என்று கேள்விப்பட்டால் யார் இறந்த செய்தி முதலில் காதில் விழுந்ததோ அவருக்கு முதலில் சிரார்த்தம் கொடுக்க வேண்டும். அந்த வரிசைப்படி மற்றவர்களுக்கும், கர்மா செய்ய வேண்டும்.

ஒருவர் இறந்த நாள் தெரிந்து மாதம் தெரியாமல் போனால் ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி ஆகிய மாதங்களில் தேய்பிறை அஷ்டமி, அமாவாசை இந்த மாதிரி நாட்களில் சிரார்த்தம் நடத்தலாம்.

ஒருவர் அயல்நாடு சென்று அங்கே மரணமடைந்தால் அவர் இறந்த தினமோ, மாதமோ தெரியாமலிருந்தால் அவர் யாத்திரை புறப்பட்ட திதியில் சிரார்த்தம் செய்யலாம்.

தாய், தந்தையர் இறந்த திதி ஒருவருக்குத் தெரியவில்லை என்றால் அஷ்டமி, ஏகாதசி, அமாவாசை முதலான (ஏதாவதொரு) நாட்களில் நீத்தார்கடன் கழிக்கலாம். பெற்றோர் சிரார்த்தத்தை விடுவது மகாபாபம். நித்திய சிரார்த்தத்திற்கு எந்த விதியும் இல்லை. அது சுபத்தையே தரும்.

"பகவானே! முன் ஜென்மாக்களின் பாப – புண்ணியங்களை எவ்வாறு அறிவது?" என்று விநயமாகக் கேட்டார் விநதா புத்திரர்.

"சுபர்ணா! பாபம் செய்து விட்டோம் என்பதை உணர்கின்றவர் அதற்கான பிராய சித்தத்தை வேதியர்களைக் கலந்து நடத்தி விட வேண்டும். அதைப் பொருட்படுத்தாமல் மடிந்து போகும் ஆத்மா யம தண்டனைகளுக்கு ஆளாகிறது. நரகவாசத்தோடு ஓநாய், நரி போன்ற பாவத்திற்கேற்ற பிறவி வாய்க்கிறது."

பொய் கூறியவன் திக்கிப் பேசுபவனாகப் பிறப்பான். பொய்சாட்சி சொன்னவன் ஊமையாகப் பிறப்பான். ஒருவர் சொல்லும் பொய்யால் எவருக்கும் கஷ்டம் வந்திருக்கக் கூடாது என்பதில் கவனமாயிருக்க வேண்டும்.

பொய் சொன்னவருக்குத் தான் நினைத்ததைச் சொல்லும் திறமையிருக்காது. படித்தவராயிருப்பினும் சபையில் பேச வராது. திருமணத்தில் தில்லு முல்லுப் பண்ணியவனும் ஊமையாகத் தான் பிறப்பான். முற்பிறவியில் கொலை செய்தவர் குஷ்டரோகத்தால், பிறர் முகம் சுளிக்க வாழ்வர்.

மனைவி சொல்லை மட்டுமே கேட்டு வாழ்பவன் அல்லது பெற்றோர் பேச்சைக் கேட்டு மனைவியைப் புறக்கணித்தவர் செவிடாகப் பிறப்பார். வீட்டோடு மாப்பிள்ளையாக்கி, கணவனை ஆட்டிப் படைக்கும், பாவை யருக்கும் இதே கதிதான்!

பிறர் வீட்டுக்குத் தீயை வைத்தவன் நரக தண்டனை அநுபவித்த பிறகு நெருப்புக் கோழியாகப் பிறக்கிறான். குருவை ஏமாற்றியவனுக்கு படிப்பு வராது. அதோடு அங்கஹீனனாகவும் பிறப்பான். பரஸ்த்ரீயைச் சேர்ந்தவன் ஈனத் தொழிலை செய்பவனாக இருப்பான். கஞ்சன் மறுபிறவியில் வறுமையில் வாடுவான்.

ஒழுக்கங்கெட்டவனுக்குப் புரோகிதம் செய்பவனுக்குப் பன்றி ஜென்மம் வாய்க்கிறது. சாஸ்திரம் படித்தவன் கொடிய பாபம் செய்தால் கழுதையாகப் பிறந்து பொதி சுமக்க நேரிடும். பலரும் பயப்படும்படி அதட்டிப் பேசியவன் பூனையாகப் பிறக்கிறான்.

சான்றோருக்குத் துரோகம் செய்தவனும், கன்னிப் பெண்ணுக்கு ஆசை வார்த்தை கூறிக் கூடியவனும், மறுபிறவியில் காளையாகப் பிறப்பார்கள். காரணமின்றி அனைவரையும் விரோதித்துப் பழி வாங்குபவர் குருடராவார்.

விருந்தினருக்கு உணவிடாதவருக்கு ஏழு பிறவிகள் காக்கை, கழுகு போன்ற பறவை வாழ்க்கை அமைகிறது. தானம் செய்த பொருளை மறுபடி வாங்கி இன்னொருவருக்குத் தானம் கொடுப்பவர் ஓணானாகப் பிறக்கிறார். அவர் மானிடப்பிறவி எடுக்கும் போதும் அற்பாயுளில் மடிகிறார்.

வேத வித்தகர்களை இம்சிப்பவர் புலி, சிங்கம் போன்ற கொடிய மிருகங்களாக ஜெனிக்கின்றனர். உடல் ஊன முற்றோரைக் கேலி செய்பவர் ஏழு ஆண்டுகள் மீனாகவும், மூன்று ஆண்டுகள் பன்றியாகவும், ஏழு வருடங்கள் முயலாகவும், ஏழு ஆண்டுகள் கோழியாகவும், அடுத்து மானாகப் பிறந்து தூய்மையடைகிறான்.

தன் புத்திரிகளைப் பொருளுக்காக விற்பவனுக்கு வேடப்பிறவி அமைகிறது. ஏழு ஆண்டுகள் தவளையாகவும், அட்டையாகவும் வாழ வேண்டி வரும். எந்த இடத்திலும் மது அருந்துபவன் நாயாகிறான்.

சிறுவர்களை அடித்து வேலை வாங்குபவருக்குக் குதிரைப் பிறவி கிடைக்கிறது. பிராணிகளை சித்திரவதை செய்பவர்கள் ரோகியாகின்றனர். பாம்பை பயத்தால் கொல்பவனும் சர்ப்பமாகப் பிறப்பதோடு சந்ததியும் விருத்திக்காது போகும். அந்தக் குலத்தில் அகால மிருத்யு ஏற்படும்.

ஏழை சுமங்கலிகளை, கன்னியரை திருமணம் போன்ற

சுபகாரியங்களில் உதாசீனப்படுத்தினாலும் வம்சம் விளங்காது. அந்தக் குலப் பெண்களுக்கு வியாதி பீடிக்கும்.

தேனீக்களைக் கொன்று தேனை எடுப்பவன் பல பிறவி தேனீயாகப் பிறப்பான். அதோடு பல ஜென்மங்கள் ஈயாகவும் பிறக்க நேரிடும்.

புத்தகங்களைத் திருடுபவருக்கும் சீக்கிரமே கண்பார்வை போய்விடும். பசித்தவருக்கு உணவிடாதவருக்கு மறுபிறவியில் பிள்ளை பிறக்காது. மற்றவருக்கு நஞ்சூட்டியவன் அடுத்த ஜென்மத்தில் தேளாக, பாம்பாக, பூரானாகப் பல பிறவிகள் எடுப்பான்.

நீர் நிலைகளைத் தூர்த்தவன் நீர் நிலைப் பிராணிகளாகப் பலகாலம் வாழ வேண்டி வரும். மற்றவர் மேல் அடாத பழி சொல்பவர் ஆமையாகப் பிறப்பார். காய், கனிகளுடன், பூவும், பிஞ்சுமான விருட்சங்களை வெட்டியவர் எட்டி மரமாய் நீண்ட காலம் வாழ்வார்.

புண்ணிய ஸ்தலங்களில் நங்கையரை காமத்தோடு பார்ப்பவர் முதலையாகப் பிறப்பெடுக்கிறார். பால், தயிர் முதலியவற்றையும், அந்தணர்களின் பொன், பொருளையும் திருடுபவர்களுக்கும், வஸ்தி ரத்தைக் களவாடுபவர்களுக்கும் தேகத்தில் வெள்ளை நோய் படரும். அடுத்த ஜென்மா புறா, கொக்கு போன்ற வெள்ளைப் பறவையாய் பிறப்பர்.

வெள்ளி, வெண்கலம் போன்றவற்றை அபகரிப்பவன் சூலை நோயால் அவதிப்படுவான். அவனுக்குக் கால், கைகளில் விரல்கள் அதிகமிருக்கும். இன்னொரு சிசுவோடு ஒட்டிப் பிறந்து வெட்டப்படுவான்.

விபசாரியின் பிழைப்பில் வாழ்பவன் கண் நோயால் அவதியுறுவான். பிறர் கஷ்டத்தில் சுகப்படுபவன் ஆடாக, எருமையாகப் பிறவிகள் எடுக்கிறான். அடுத்து பனை மரமாகிறான். யாகப் பொருளை கவர்பவர்களுக்கு குரங்கு ஜென்மா வாய்க்கிறது. மானிடப்பிறவியில் அவனைக் காசநோய் பற்றும்.

இறைச்சியை அறுத்து விற்பவனுக்கு மறுபிறவியில் திருமணம் நடக்காது. ஏதோ சிறு புண்ணிய பலத்தால் விவாகம் முடிந்தாலும் குடும்பம் பிரியும். அடுத்து அவன் மயிலாகப் பிறந்து பாபத்தைப் போக்கிக் கொள்கிறான்.

சிரார்த்த நெய்யைக் களவாடுபவன் எலியாகப் பிறக்கிறான். எண்ணெயில் உணவுப்பண்டங்களில் கலப்படம் செய்து விற்பவர்கள்

மூஞ்சூறாக, பெருச்சாளியாக ஜெனன மெடுப்பர். அடுத்த பிறவிகள் கஸ்தூரிமான், புனுகு பூனை என்று அமைகிறது.

பணத்துக்காக சம்பந்தமில்லாதவர்களைக் கொலை புரிபவன் நூறு பிறவிகள் புனுகு பூனையாக, நரியாக, கரடியாக, செந்நாயாக, அரணையாக ஜெனனமெடுக்கின்றனர்.

சாஸ்திரங்களை, வேதங்களை, பூஜைகளை இகழ்கின்றவன் யானையாகப் பிறந்து மனிதர்களிடம் பிடிபடுகிறான். சிறிதளவு புண்ணியம் செய்தவர்களுக்குக் கோவில் யானையாகும் பாக்கியம் கிட்டுகிறது.

யமபுரிக்குச் செல்லும் வழியிலேயே பல துன்பங்களை அனுபவிக்கும் பாபாத்மாக்கள் வைதரணி நதியில் தவிப்பார்கள்.

பாகவதம், இராமாயணம் போன்ற உபன்யாசம் நடக்கும் இடத்தில் குழப்பம் விளைவித்தவர், தானம் செய்த பிறகு அதை நினைத்து துக்கித்தவர். பொய்யாகப் பழி போடுபவர் இவர்கள்தான் அந்த வைதரணி ஆற்றில் கிடப்பர்.

## 16. நல்வினைக்கான நன்மை

அன்னதானம் செய்தவர் விரும்பிய உலகத்தில் ஒரு பருக்கைக்கு ஒரு வருடம் வீதம் சுகித்திருப்பர். பசிக்கு அன்னமிடுவதைப் போன்ற உயரிய தானம் வேறெதுவும் கிடையாது. இதற்கு உயர்ந்தவர், தாழ்ந்தவர், நல்லவர், கெட்டவர் என்ற பேதமெல்லாம் கிடையாது. கால நியமும் இல்லை.

கோதானம் செய்கின்றவர் கோலோகத்தில் வாழ்வர். அதன் ரோமத் துக்கொரு வருடம் கோவிலிலோ, புண்ணிய தீர்த்தக்கரையிலோ வேத மோதும் உத்தமருக்குக் கொடுத்திருந்தால் இன்பமாய் வாழ முடியும். பசு கன்றீனும் சமயம் தானம் செய்தவருக்குக் கட்டாயம் வைகுண்ட வாசம் உண்டு.

குடைதானம் செய்தவருக்கு ஆயிரம் ஆண்டுகள் வருண லோக வாசம். கட்டில், மெத்தை, ஜமக்காளம், பாய், தலையணை இதில் எதைத் தானம் செய்தாலும் சந்திர லோகத்து சுகங்களை அனுபவிக்கலாம். வஸ்திர தானம் கொடுத்தவர் 10,000 ஆண்டுகள் வாயு லோகத்தில் வாழ்வர்.

ஆடையோடு சாளக்கிராமத்தை ஒழுக்கமுள்ள வைதீகருக்குத்

தானமளித்தவர் சூரிய – சந்திர காலம் வரை வைகுண்டவாசியாவார். இரத்தம், கண், உடல் போன்றவற்றை (ஜீவதானம்)த் தானம் கொடுப்பவர் அக்கினி லோகத்தில் ஆனந்தமாயிருப்பர்.

ஆலயத்துக்கு கஜதானம் (யானை) அளிப்பவர் இந்திரனுக்கு சமமான ஆசனத்தில் அமர்ந்து அப்சரஸுகளின் நாட்டியத்தை ரசித்திருப்பர்.

குதிரையும், பல்லக்கும் கோவிலுக்கு அளித்தவர் பதினான்கு இந்திரன் காலம் வரை வருணலோகத்தில் வாழ்வர்.

நந்தவனங்களை ஆலயத்துக்கு அளிப்பவர் ஒரு மன் வந்தர காலமும், வெண்சாமரம் தானம் கொடுத்தவர் 10,000 ஆண்டுகளும் வாயு லோகத்தில் சுகமாய் இருப்பர்.

தானியங்களையும், நவரத்தினங்களையும் தானம் செய்பவர் மறு ஜென்மத்தில் அறிவாளியாகவும், தீர்க்காயுள் கொண்டவராயும் வாழ்வர். அவற்றைத் தானம் வாங்கிய வரும் வைகுண்டத்தை அடைவர்.

பயன் கருதாது தானம் செய்பவரின் மரணம் உன்னதமா யிருப்பதோடு மீண்டும் பிறவி வாய்ப்பதில்லை. அவர்கள் பிரம்ம லோகத்தை அடைகிறார்கள். நற்செயலை விரும்பிச் செய்கின்றவர்கள் சூரிய லோகத்துக்குச் செல்கிறார்கள். தீர்த்த யாத்திரை புரிகின்றவர்களுக்கும் சத்தியலோகவாசம் கிட்டுகின்றது.

ஒரு கன்னிகையை ஒழுக்கமாக வளர்த்து விவாகம் செய்து கொடுப்பவன் பதினான்கு இந்திர ஆயுட்காலம் வரை அம்ராவதியில் சுகித்திருப்பர். பொன், வெள்ளி, ஆபரணங்கள் இவற்றைத் தானம் செய்தவர் குபேர லோகத்தில் ஒரு மன்வந்தரம் வாழ்வார்கள். தாமிரம், நெய் இவற்றைத் தானம் கொடுத்தவருக்கு சந்திர லோக வாசம்.

பண உதவி செய்பவர்கள் ஸ்வேத தீபத்தில் நெடுங்காலம் வாழ்வார்கள். நீர் நிலைகளைச் சீர்திருத்துபவரும், உண்டாக்குபவரும் ஜனலோகத்தில் நீண்ட காலம் சுகித்திருப்பர்.

பயனுள்ள மரங்களை நட்டுப் பாதுகாப்பவர் தபோ லோகத்தை அடைகிறார். பூந்தோட்டத்தைத் தானமாக, கைங்கரியம் செய்பவர்களுக்கு அளித்தால் 16 ஆண்டுகள் துருவ லோகத்தில் சுகித்திருப்பர். ஆலயத்துக்கு விமானம் அமைக்கும் செலவை ஏற்பவன் வைகுண்டத்தில் ஒரு மன் வந்தரம் வாழ்வான்.

புராணநிகழ்ச்சிகளைக் குறிக்கும் சிற்பங்களையுடைய கோபுரம் கட்டும் செலவினை ஏற்றால் 64 ஆண்டுகள் பரம பதத்திலிருப்பான். சிவிகை தானம் செய்தால் எட்டு ஆண்டுகளும், டோலி தானம் செய்தால் நூறு மன்வந்தமும் பரம பதவாசம் கிட்டும்.

தெய்வம் பவனி வரும் வீதிகளை செம்மைப்படுத்துபவர் 10,000 வருடங்கள் இந்திர லோகத்தில் சுகித்திருப்பர். எந்த எந்த சுகத்தை யார் யார் விரும்புகின்றார்களோ அவரவர் அதற்குரிய பொருட்களை உயரிய ஒழுக்கமுள்ளவர்களுக்குத் தானம் செய்தால் அந்தந்த சுகத்தை அடைவார்கள்.

மெய் ஞானியரின் தரிசனமும், ஸ்பரிசமும் பாவத்தை அழிக்கும் சக்தி வாய்ந்தது.

பௌர்ணமியில் டோலோற்சவம் செய்பவர் இம்மையிலும், மறுமை யிலும் இன்பமடைவார். அதை பங்குனி உத்திரத்தன்று நடத்துபவர் 200 வருடங்கள் வைகுண்ட வாசம் செய்வர்.

தாமிரப் பாத்திரத்தில் எள்ளைத் தானம் செய்பவர், ஒரு எள்ளுக்கு ஒரு வருஷம் வீதம் கைலாசத்தில் வாழ்வர். அதன் பிறகு நற்குலத்தில் உதித்து திடகாத்திரமாக, கீர்த்தியோடு பிரகாசிப்பர்.

சுவையான பழங்களைத் தானம் கொடுப்பவர் ஒரு கனிக்கு ஒரு ஆண்டு வீதம் கந்தர்வ லோகத்தில் சுகித்திருப்பர். அடுத்து நற்குலத்தில் பிறந்து, நல்ல மனைவியையும்; சத்புத்திரர்களையும் அடைந்து தீர்க்காயுளுடன் வாழ்வர். கிரகதானம் செய்தவர் மறுபிறவியில் நாட்டின் தலைவனாவார்.

ஒரு சொம்பு நல்ல தண்ணீரை நல்லவர்களுக்குத் தானம் செய்தாலே கைலாய வாசம் கிட்டும். தூப, தீப, ஸ்தோத்திரம், நைவேத்தியங்களோடு ஸ்ரீஹரியை பூஜை செய்பவர் புத்தியும், செயலும், நல்லவிதமாகவே செல்லும். அவர் புத்திர, பௌத்ராதி சிறப்பையும் பெறுவார்.

கார்த்திகை மாதத்தில் துலாதானம் (வாழைப்பழம், சத்துமா, சர்க்கரை எதுவானாலும்) செய்பவர் மூன்று யுகங்கள் வைகுண்ட வாசம் பெறுவர். அருணோதயத்தில் கங்கையில் நீராடுபவர் 60,000 ஆண்டுகள் பரமபதத்திலிருப்பர்.

சாளக்கிராமத்தை ஆசாரத்தோடு பூஜித்து அதன் தீர்த்தத்தைப் பானமாக அருந்துபவன், வைகுண்டத்தில் நூறு பிரம்ம ஆண்டுகள் வாழ்ந்து, பூவுலகில் செல்வந்தனாக, வள்ளலாக, ஆயுஷ்மானாக மேன்மையுடன் வாழ்வான்.

விரதம், நோன்புகளை பக்தியோடு கடைபிடிப்பவர் பதினான்கு இந்திரர் காலம் வரை, சொர்க்க புரியில் வாசம் செய்வர்.

சுதர்சன ஹோமமும், தன்வந்திரி ஹோமமும் செய்பவர் ஆரோக்கியவானாக, சத்ருக்களில்லாதவராக, தீர்க்காயுளுடன் வாழ்வர். ஷோடச மகாலக்ஷ்மி பூஜையை முறையோடு செய்பவர், குலம், பதினாறு பேறுகளையும் பெற்று பெருமையுடன் விளங்கும்" என்று மகாவிஷ்ணு கருடனுக்கு உபதேசித்த இந்த கருடபுராணத்தை உங்களுக்குச் சொல்லும் பாக்கியம் எனக்குக் கிட்டியது.

இதைப் படிப்பவரும், கேட்பவரும், படிப்பிக்க வைப்பவரும், புண்ணிய காலங்களில், இந்நூலைத் தானம் கொடுப்பவரும், தனது அந்திம காலத்தில் நல்ல உலகத்தை அடைந்து இன்புறுவார்கள். அவர்களின் பெற்றோரும், பிதுர்க்களும் முக்தி பெறுகின்றனர்.

சங்கராந்தி, விஷு புண்ணிய காலம், கிரகண காலம், சிரார்த்த தினம் இவைகளில் இப்புராணத்தைப் படிப்பதால் சந்ததிகளுக்கு ஆயுள் அதிகரிக்கும். யமபயம் விலகும். மோட்சம் சம்பவிக்கும்" என்று சூதமாமுனிவர் கூற, சனகாதியர் "வேத வியாசரின் சீடரே! இந்த உத்தம புராணத்தைக் கூறி எங்களை மேன்மைப்படுத்திய மகரிஷே! எங்கள் நன்றியைத் தெரிவிக்கும் பொருட்டு இந்த சிறிய சன்மானத்தைப் பெற்று எங்களைக் குளிர்விக்க வேண்டும்" என்று சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து சன்மானங்களை வழங்கினர்.

## கீழ் ஏழு உலகங்கள்:-

அதலம், விதலம், சுதலம், தலாதலம், நஸாதலம், மகாதலம், பாதாளம் என்று கீழ் ஏழு உலகங்கள் உள்ளன.

**1- அதலம்:**

அசுர சிற்பியான மயனின் புதல்வனான பலன் என்பவன் 96 மாயைகளோடு இங்கு வாழ்கிறுன். அவன் கொட்டாவி விட்டால். பும்சவி. ஸ்வைரணி. காமனி என்ற மூன்று மங்கையர் வெளிப்பட்டு அங்கு வருபவர்களை மோக வசப் படுத்துவர்.



## 2- விதலம்:

இங்கே ஆடகேஸ்வரர், பிரதம கணங்கள் சூழ பிரும்ம படைப்புகளை விருத்தி செய்கிறார். பார்வதி–பரமேஸ்வரரின் இன்ப வீரியம் இங்கே நதியாய் ஓடுகிறது. அதில் விளையும் ஆடகம் பொன்னை, அசுரப் பெண்கள் அணிந்து மகிழ்வர்.



### 3- சுதலம்:

மகாவிஷ்ணு துர்விக்ரமனாகி மகாபலியை வருண பாகங்களால் கட்டித்தள்ளிய இடம் சுதல லோகம், அங்கே மகாவிஷ்ணுவே துவார பாலகராயிருக்கிறார். இராவணன் அங்கு திக்விஜயம் செய்த போது ஸ்ரீமந் நாராயணர்தன் கால் பெரு விரலால் இராவணனைத்தூக்கி வீச அவன் 10,000 யோஜனைக்கப்பால் போய் விழுந்தான்



## 4-தலாதலம்:-

அசுர சிற்பி மயன் வாழ்வது தலாதல லோகத்தில் .



**5-ரஸாதலம்:-**

குகன், தக்ஷன், சுவேனன், சாலையன், என்கிற மகா கொடூரமான, பல தலைகளுடைய, நான்கு வகை சர்ப்பங்கள், குடும்பத்தோடு, சஞ்சரிக்கும் உலகமிது,



**6-மகாதலம்**

நிவாத கவசர்கள், காலகேயர்கள், என்ற பிரசித்தி பெற்ற அரக்கர்கள் வாழும் உலகமிது. இவர்கள், இந்திரனின் தாதியான ஸரளமயி, சாபத்தால் இங்கு ஓடி வந்தவர்கள்.



**7-பாதாளம்:-**

முப்பதினுயிரம் யோஜனை பரப்புள்ள, சிரசைச் கொண்ட ஆதி சேஷன் தன் இனத்தவரோடு வாழும் உலகமிது.



# 3ம் பாகம் - கருட சரித்திரம்

கருட புராணத்தில் கருடன் வரலாறு இல்லாவிட்டால் சரியாகுமா? கருட வரலாறு படிப்பதால் சர்ப்பதோஷம் நீங்கும். ராகு, கேது தோஷம் அகலும். விஷ மருந்துகள் பாதிப்பை ஏற்படுத்தாது. பெருமாளின் அனுக்கிரகத்தையும் பெற்றுத் தரும்.

கருடனுடைய இடது கையில் ஆதிசேஷன்; பூணூல் வாசுகி; தக்ஷகன் அரைஞாண்; வலது கரத்தில் குளிகன்; கார்க்கோடகன் ஹாரம்; இரு செவிகளிலும் குண்டலங்களாக பத்மன், மஹாபத்மன், சிரஸில் சங்கபாலன்.

இவ்வாறு நாகாபரணம் பூண்ட கருடனுக்கு சர்ப்பங்கள் தங்களின் சிரோரத்ன ஜோதியால் தீப ஹாரத்தி எடுத்தனவாம்.

கருடனுடைய பத்தினிகளான ருத்ரா – சுகீர்த்தி இருவரும் தங்கள் பர்த்தாவின் வீரதீரச் செயல்களைக் கண்டு ஆனந்தத்தோடு கட்டித்தழுவியதால் உரகங்கள் கருடனது திருமேனியில் ஒட்டிக் கொண்டு விட்டதாக சொல்லப்பட்டிருக்கிறது.

கருடன் சரித்திரம் வாசிப்பதால் மகோதரம் போன்ற நோய்களும், கொடிய வாயு நோய்களும் வராது. வந்தவர்களுக்கு சீக்கிரமே குணமாகும். எவரையும் வசீகரிக்கச் செய்யும். நீரை வற்றவைக்கும். கொடிய பகைவரையும் நிர்மூலமாக்கும். வாக்கு சாதுரியம், வித்யைகளில் தேர்ச்சி, உடல் வலிமை, ஆனந்தம் அனைத்தையும் அளிக்கும்.

கருடன் ஐந்து வியூக வடிவமுள்ளவர் என்பதை பாஞ்சராத்ரம்

"ஸத்ய; ஸுபர்ண: கருட: தார்ஷ்யச்ச: விஹகேஸ்வர: |
பஞ்சாத்மகஸ்ய ப்ராணஸ்ய விகார ஸ்த்வேஷ பஞ்சதா:||

என்கிறது. இதன் விளக்கம்:

1. இரண்டு கரங்களில் பனி போன்று வெண்மையானவர். இந்த நேரம் இவர் திருநாமம் சத்யன்.

2. பத்மராகம் போன்ற நிறம். தங்க விழிகள். தூய்மையான, சுபமான வடிவமுடைய இவர் சுபர்ணனாகிறார்.

3. பொன் போன்ற வண்ணம். வளைந்த புருவங்கள்; குறுக்குப் பார்வையினால் பக்ஷிராஜனாகிறார்.

4. கார்மேகம் போன்ற நிறம்; கடைக்கண் நோக்கு; அதனால் இவர் தார்ஷ்யனாகிறார்.

5. உருக்கிய சொர்ணம் போன்ற கண்கள்; பஞ்சவர்ணம் காட்டும் திருமேனி; அதனால் விஹஹேஸ்வரன் என்றழைக்கப்படுகிறார்.

ஸ்ரீராமபிரானும், இளைய பெருமாளும் நாகாஸ்திரத்தால் கட்டுண்டு கிடக்க, கருட பகவான் தோன்றி தன் திருக்கரங்களால் தொட, நாகாஸ்திரம் கட்டவிழ்ந்தது" என்கிறது வால்மீகி ராமாயணம்.



"ததோ முகூர்த்தாத் கருடம் வைநதேயம் மகாபலம்
வானரா: தத்ருக: ஸர்வே ஜ்வலந்தமிவ பாவகம்:" என்பதே அந்த வாக்கியம்.

"சீக்கிரமே பட்டாபிஷேகம் நடக்கும்" என்று அருள் வாக்கும் கூறியிருக்கிறார்.

கருடனது வாகனம் வாயுபகவான்.

தாசன், சினேகிதன், வாகனம், ஆசனம், கொடி, விதானம், சாமரம் என்ற ஏழு விதங்களில் எம்பெருமானுக்குக் கருடாழ்வார் கைங்கர்யம் செய்வதாக, வைணவ ஆச்சார்ய பீடத்தை அலங்கரித்த ஸ்ரீஆளவந்தார் அருளியிருக்கிறார்.

விஷத்தை முறிப்பதால் 'விஷஹாரி' என்ற திருநாமமும் கருடருக்கு உண்டு.

தக்ஷன், தனது 13 புத்திரிகளை கச்யப முனிவருக்கு விவாகம் செய்து கொடுத்தான். தாக்ஷாயணியை ருத்ரன் மணந்தார். 13 பெண்களில் அதிதி, இந்திராதி தேவர்களைப் பெற்றாள். திதி அசுரர்களைப் பெற்றாள். கத்ருவின் நிறம் கறுப்பு. அவள் ஆறு ஆண்டுகள் கரு தாங்கி ஆதிசேஷன், வாசுகி முதலான ஆயிரம் சர்ப்பங்களைப் பெற்றாள். விநதை பேரழகி.

"ஆதிசேஷன் பரந்தாமனுக்குப் படுக்கையாக இருக்கிறான். என்பிள்ளை வாசுகி திருப்பாற்கடலை கடைய உதவினான் என்றெல்லாம் பெருமையடித்துக் கொள்கிறாள் கத்ரு. எனக்கும் அப்படி பௌருஷமுள்ள புதல்வர்கள் பிறக்க வேண்டு" மென்று கச்யபரிடம் வேண்டினாள் விநதை.

"அப்படியே நடக்கும்" என்று அருளினார் கச்யபர். விநதைக்கு இரண்டு முட்டைகள் பிறந்தன. இரண்டையும் இரண்டு ஜாடிகளிலிட்டு "தானாக வெளிவரும் வரை பொறுமையாயிரு" என்று கூறினார் முனிவர்.

பிரம்மாவின் மானஸ புத்திரர் க்ருது. அவரின் மனைவி க்ரியா. அவள் 60,000 மைந்தர்களைப் பெற்றாள். ஆனால் அவர்கள் ஒவ்வொருவரும் கட்டை விரல் பருமனும், நீளமும் கொண்டிருந்தனர். இவர்கள் தினந்தோறும் சூரிய மண்டலத்தைச் சுற்றி வரும் மகா தபஸ்விகள். இவர்கள் ஒருவரை ஒருவர் பிரியாமல் கூட்டமாக சஞ்சரிப்பர். ஆலமரம், மூங்கில் போன்றவற்றின் இலைகளில் தலைகீழாகத் தொங்கித்தவம் செய்பவர்கள்.

கச்யபர் விநதையின் கோரிக்கை நிறைவேற புத்திர காமேஷ்டி யாகம் செய்தார். எல்லா தேவர்களும், அனைத்து ரிஷிகளும் அதற்கு வேண்டிய உதவி செய்தனர்.

இந்திரன் பொரச மரத்தின் கிளையை எடுத்துக கொண்டு ஆகாய மார்க்கமாக வந்தான். வாலகில்யர்கள் அனைவரும் சேர்ந்து ஒரு சிறிய சமித்தை எடுத்து வந்தனர்.

மழை காலம். மாட்டின் குளம்பு அழுந்திய இடத்தில் நீர் தேங்கியிருந்தது. அதைத் தாண்ட முயற்சிக்கையில் சிலர் அதில் விழுந்தனர். இந்திரன் இதைக்கண்டு ஏளனமாக்கச் சிரித்தான்.

"இந்திரா! நகைக்கிறாயா? எண்ணியதை எண்ணியபடி நடத்தும் பலமுடைய மற்றொரு இந்திரனைப் படைக்கிறோம் பார்" என்று சூளுரைத்து உடனே வேள்வியைத் தொடங்கினர்.

இந்திரன் அஞ்சி தந்தை கச்யபரைச் சரணடைந்தான்.

"யாகத்தை நிறுத்த வையுங்கள். அறியாமையால் தவறு செய்தேன்" என பிரார்த்தித்தான்.

கச்யபர் வாலகில்யர்கள் நடத்தும் வேள்விக்குச் சென்றார். அவரை 60,000 பேரும் வரவேற்று உபசரித்தனர். "எதற்கு இந்த யாகம்?" என்று கேட்டு நடந்ததை அறிந்து கொண்டார்.

"மகரிஷிகளே! இந்திரன் படைக்கும் கடவுளான பிரம்மாவினால் பதவியில் அமர்த்தப்பட்டவன். நீங்கள் அதற்குப் போட்டியாக ஒருவனை உருவாக்கினால் நான்முகனை அவமதித்ததாகாதா? அதற்காக இந்திரன் செயல் சரியென்று சொல்லவில்லை. உங்கள் சினம் நியாயமானதே! உங்கள் சபதம் நிறைவேற நானொரு யுக்தி உரைக்கிறேன். உங்களது இந்த வேள்வியில் உதிக்கும் புத்திரன் பறவைகளின் அரசனாக இருக்கட்டுமே" என்றார்.

வாலகில்யர்கள் "சதுர்முகனின் மதிப்பைக்குறைப்பது எங்கள் நோக்கமில்லை. இந்திரன் உங்கள் மகன். இந்த யாக மைந்தனும் உங்கள் குமாரனாகத்தானிருக்க வேண்டும். இந்திரன் செருக்கு இவனால் அடங்க வேண்டும்." என்று கோரினர்.

வேறு வழியில்லை. சத்திய வாக்கியரிடமிருந்து யாக பலனைப் பெற்று

விநதையின் இரண்டாவது முட்டையில் செலுத்தினார். அது தான் கருட பகவான்.

வெகு காலம் காத்திருந்த விநதை ஒருநாள் அவசரப்பட்டு முதல் ஜாடியைத் திறந்தாள். அதற்குள்ளிலிருந்து வெளிவந்த தேஜோமயமான பிள்ளைக்கு இடுப்பு வரைதான் வளர்ந்திருந்தது.

"அம்மா! என்னை இப்படி ஊனமுள்ளவனாக்கி விட்டாயே! ஸ்திரீகளுக்கு பொறுமை இருக்கும் என்று தானே, கடவுள் தாய்மையை பெண்களுக்கு வழங்கியிருக்கிறார்! என்னை அங்கஹீனனாக்கிய நீ சிலகாலம், உன் சக்களத்தி கத்ருவுக்கு அடிமையாயிருக்கக் கடவது!" என சபித்தார் அருணன்.



விநதை மனம் நொந்து கண்ணீர்விட அருணன் மனமிளகி "தாயே! ஆத்திரத்தில் நானும் அறிவிழந்து சபித்து விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள். அவசரப்பட்டு அடுத்த ஜாடியையும் திறந்து விடாதீர்கள். என் தம்பி உங்களின் அடிமைத்தளையைத் தகர்ப்பான்" எனக்கூறிச் சென்றார்.

அந்த அருணன் தான் சூரியனின் தேரோட்டி. அதனால்தான் விடியற்காலையை "அருணோதயம்" என்றழைக்கிறோம்.

ஆடி மாதம் ஸ்வாதி நக்ஷத்திரத்தன்று, சூரியன் கடக ராசியிலும், சந்திரன் துலா ராசியிலும் சஞ்சரிக்கும் புண்ணிய தினத்தில் ஜாடி வெடித்து சமுத்திரத்தில் தோன்றும் வடபாமுகாக்னியைப் போல வெளிப்பட்டார் பக்ஷிராஜாவான கருடன்.

அக்னிப் பிழம்போ என்று தேவர்கள் அஞ்சினர்.

"அக்னியே! நீ ஏன் பயங்கரமாய் ஜொலிக்கிறாய்? எங்களால் இந்த வெப்பத்தைத் தாங்க முடியவில்லை" என்று பிரார்த்தித்தனர்.

அக்னி, "இது நானல்ல. எனக்கு இத்தனை வலிமை கிடையாது. இது கச்யபரின் தேஜஸ்; வாலகில்யர்களின் வேள்விப்பலன்" என்றார்.

கருடன் வான வெளியில் பறந்து இறக்கைகளை அடித்ததில் பெரிய மலைகள் உடைந்து நொறுங்கின. நான்கு கடல்களும் கலங்கின.

நக்ஷத்திரங்கள் இடம் பெயர்ந்தன. ஆயிரம் மைல்கள் பரந்து வளர்ந்திருந்த ரோகிண மரத்தின் கிளையை முறித்துப் போட்டார்.

"கருடா! நீ அடிமையின் மகன். என்னை ஏற்றிக் கொண்டு ஆகாயத்திலிருந்து எல்லா இடங்களையும் சுற்றிக்காட்டு" என்று உத்தரவிட்டாள் பெரியதாயார் கத்ரு.

கருடன் அப்படியே செய்தார். இரவு தாயாரிடம் தனிமையில் "அன்னையே! நீங்கள் இருவரும் பிறப்பிலும், திருமணத்திலும் சமமான உறவு பெற்றிருக்க தாங்கள் எப்படி பெரியம்மாவிற்கு அடிமையானீர்கள்?" என்று வினவினார்.

## 1. கத்ருவின் சூழ்ச்சி!

விநதை கண்ணீருடன் அந்த அவல வரலாற்றைக் கூறினாள்.

"கருடா! உன் தமையன் இருந்த பாண்டத்தை அவசரப்பட்டுத் திறந்து

அவனை ஊனமாக்கி விட்டேன். அவன் சினத்தோடு இட்ட சாபத்தால் அவதிப்படுகிறேன்.

ஒரு நாள் மலையருவியில் நானும், கத்ருவும் நீராடிக் கொண்டிருந்தோம். பள்ளத்தாக்கில் திருப்பாற்கடலில் பிறந்த உச்சை சிரவஸ் என்ற வெள்ளைக்குதிரை மேய்ந்து கொண்டிருந்தது.



கத்ரு என்னை வம்புக்கிழுக்க, "அழகான வெண்மைக் குதிரைக்கு வால் மட்டும் கறுப்பாயிருப்பது திருஷ்டி கழித்தாற் போல் இல்லையா, விநதா?" என்றாள். நானாவது பேசாமலிருந்தேனா?

"பாற்கடலில் உதித்த எல்லாமே தூய வெண்மை. இது மட்டும் எப்படி வாலில் கருமையைக் கொண்டிருக்கும்?" என்று கேட்டேன்.

"இல்லை. கறுப்புதான்" என்று சாதித்தாள். சூரிய அஸ்தமன நேரம். மங்கிய வெளிச்சத்தில் தெரியாமல் சொல்கிறாளென்று நினைத்து "நாளை உதயத்தில் புரிய வைக்கிறேன்" என்றேன்.

"சும்மா சொன்னால் எப்படி? நான் சொன்னபடி இருந்தால் நீ என் அடிமை. நீ கூறியபடி இருந்தால் நீ இட்ட பணிகளை நான் செய்கிறேன்" என்றான். சம்மதித்தேன்.

கத்ரு தன் பிள்ளைகளான நாகர்களை "உச்சைசிரவஸின் வாலைத் துன்புறுத்தாமல் சுற்றிக் கொள்ள வேண்டும்" என்று கேட்டுக் கொண்டிருக்கிறாள்.

கார்க்கோடகன் சம்மதித்திருக்கிறான். இதெல்லாம் எனக்கு இப்போது தான் தெரியும். மறுநாள் சூரியோதத்தில் ஸ்நானம் செய்யப் போனால் உச்சைச்சிரவஸின் வால் கறுப்பாயிருக்கிறது. எப்படி என்று குழம்பினேன். ஆனாலும் பேச்சு பேச்சுதானே! அடிமையாகி விட்டேன்" என்று விம்மினாள்.

கருடன் மறுநாள் கத்ருவிடம் சென்றார்.

"என்ன செய்தால் என் மாதாவின் அடிமைத்தனம் நீங்கும்?" என்று கேட்டார்.

"இந்திரனுடைய கடும் பாதுகாப்பிலுள்ள, எட்டு கொடிய சர்ப்பங்களின் காவலுடையதான, எட்டு முனை கொண்ட இருப்பக்கமும் கூர்மையான, எப்பொழுதும் சுழன்று கொண்டிருக்கும் பொக்கிஷ அறையிலுள்ள, அமிர்தத்தைக் கொண்டு வந்தால், உடனே விடுதலைதான்" என்றாள் கத்ரு.

கருடன் தாயிடம் ஆசி பெற்று, விண்ணுலகம் புறப்பட்டார். தனது அகலமான, நீண்ட இறக்கைகளை உதறிக் கொண்டு பறந்தார்.

# உ. அமுதம் கொணர்ந்த சுபர்ணன்!

அப்போது ஏற்பட்ட ஓசை பிரயாண சமயத்தில் ஒலிக்கும் தூர்யம் என்கிற மங்கள வாத்யம் போலிருந்தது.

“காருடம் தர்சனம் புண்யம், ததோபித்வனிருச்யதே” என்ற வாக்கியப்படி கருடனுடைய குரல் கூட மங்கள சகுனமே.

கருடன் இறக்கைகளை அடிக்காமல் மிக உயரத்தில் நீண்ட நேரம் சஞ்சரிக்கக் கூடியவர். ஒரு கட்டிடத்தின் மேல் இறக்கைகளை படபடத்தபடி வைநதேயன் பறப்பாரேயானால் அந்த வீட்டிலுள்ளவர்களுக்குக் கிரகங்களின் வக்ரம், அதிசாரம் இவற்றால் கெடுதி நேரப்போகிறதென்பதை சூசகமாக அறிவிப்பதாகும்.

புதன், சுக்ரன் போன்ற கிரகங்களுக்கு ஜாதகக் கட்டத்தில் (ஒன்றில்) ஒரு மாதம் சஞ்சரிக்கலாம் என்பது நிர்ணயித்த விதி. அவர்கள் அதற்குள் முந்தைய இடத்துக்குத் திரும்பினால் வக்ரம். அக்தல்லாமல் குறிப்பிட்ட காலத்துக்குள் அடுத்த கட்டத்துக்குப் போய் விட்டால் அது “அதிசாரம்”. இப்படிப் போவதால் நன்மை நடந்து கொண்டிருக்கும் குடும்பத்தில், தீங்கு நேரலாம்.

பதினாறு வகை மங்கல வாத்திய சப்தத்தின் பலன், கருடத்வனிக்கு உண்டு. இதைக் கேட்டு பாதாளத்திலுள்ள, பன்னகங்கள் பயந்து நடுங்கின. வளைந்து வளைந்து செல்வதால் நாகங்களுக்குப் பன்னகம், ஜிஹ்மகம் என்றெல்லாம் பெயர் வந்தது. பல்லில் விஷமுள்ள நாகங்களை, ஆசீ விஷம் என்பர்.

விபாவஸு, சுப்ரதீகர் இருவரும் சகோதரர்கள். விபாவசு “குடும்பம் பிரியக்கூடாது. அதனால் பாகப்பிரிவினை வேண்டாம்” என்று தம்பியிடம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். அதனால் கோபம் கொண்ட சுப்ரதீகரிஷி தமையனை “பிடிவாத குணம் கொண்ட நீ யானையாகக் கடவது” என்று சபித்தார்.

விபாவஸு முனிவருக்கும் சினம் மூண்டது. தான் மட்டுமே பிழைக்க கூடோடு திரியும் ஆமையாவாய்” என்று திருப்பி சபித்துவிட்டார். அப்படி மாறியபிறகும், அவர்கள் சண்டை ஓயவில்லை!

கருடன் அவர்கள் இருவரையும் நகங்களில் இடுக்கிக் கொண்டு இமயமலைக்குப் பறந்தார். ஒரு ஆலமரத்தில் வைத்தார். அங்கும் அவர்கள் சண்டையிட, கிளை முறிந்தது. அவர்களை மேருமலை முகட்டுக்குக் கொண்டு வந்து, அவர்களுக்கு முக்தி கொடுக்க, வாதாபியை அகஸ்திய முனிவர் ஜீரணம் செய்தது போல், தந்தையின் ஆசியுடன் உண்டு பசியாறினார்.

அமராவதி சென்று அமிர்த கலசத்தைப் பூக் கொய்வதுபோல் லாவகமாகத் தூக்கினார். இந்திரன் தலைமையில் தேவர்கள் அமிர்த கும்பத்தை மீட்க கருடனுடன் சண்டையிட்டனர். சிறகை கருடன் உதற "ஓம், ஸ்ரீசுபர்ண, மங்களானி பவந்து" என்று மகான்கள் ஸ்தோத்தரித்தனர். சிறகடிக்கும் கருடனைக் கண்டு நாமும் இப்படி தியானித்தால் கிரகதோஷங்கள் விலகும்.

வஜ்ராயுதத்தை இந்திரன் வீச (வஜ்ராயுதம் நியம நிஷ்டரான ததீசி முனிவரின் முதுகெலும்பு) அதற்கு மரியாதை கொடுக்கும் நிமித்தம் தனது இறக்கைகளில் இரண்டு சிறிய சிறகுகளைத் தானே உதிர்த்தார். கருடனுக்கு அப்போது 'சுபர்ணன்' என்ற பட்டப்பெயரை அளித்தான் இந்திரன்.

எண் திசையினரையும் வெற்றி கொண்ட சுபர்ணனின் வீரத்தை மகா விஷ்ணு பாராட்டினார். "கருடா உனக்கொரு வரம் தருகிறேன். கேள்" என்றார்.

"சக்ரதாரி! நீரென்ன எனக்கு வரம் கொடுப்பது? ஜெயித்த நான் உங்களுக்கு வரம் தருகிறேன்" என்றார். கருடன் கர்வத்துடன்.

இதைத்தானே பகவான் எதிர்ப்பார்த்தார்!

"நீ எனக்கு நினைத்த போதெல்லாம் வந்து வாகனமாக இருக்கவேண்டும்" என்று கேட்டு விட்டார். மறுக்க முடியுமா?

அமிர்தத்தைக் கொடுத்து அன்னைக்கு விடுதலை கிடைத்தவுடன் வருகிறேன். அதேபோல் உங்களுக்கு த்வஜமாக(கொடி) இருக்கும் பாக்கியத்தை அருள வேண்டும்" என்று கோரினார் பக்ஷிராஜன்.

"அப்படியே ஆகட்டும்" என்று வரம் கொடுத்தார் பரந்தாமன். அமிருதத்தைத் தரையில் வைத்தால் வீரியம் கெட்டு விடும். தர்ப்பையைப் பரப்பி அதன்மேல் வைத்தார் சுபர்ணன். கத்ருவிடம் "என் தாயாருக்கு எப்போது விடுதலை?" என்று சினத்தோடு கேட்டார். பேராசை விழிகளில் மின்ன நின்ற கத்ரு. "இந்த விநாடியிலிருந்து விநதையின் அடிமைத்தனம் அழிந்தது" என்றாள்.



நாகங்களை அமிர்தம் உண்ணும்படி அழைத்தாள். நாலாதிசையி லிருந்தும் சர்ப்பங்கள் சாரிசாரியாக வந்தன. கருடன் சிறகை அடித்தபடி பறந்தார். அவரது இறக்கையின் காற்று வேகத்தில் அமிர்தம் தர்ப்பையில் சிந்தியது. அரவங்கள் ஆவலோடு அமிர்தத்தை உண்ண தர்ப்பை, அவற்றின் நாக்குகளை இரண்டாகக் கிழித்தன. வெண்மையான அமுதம் சிவப்பாகியது கண்டு, கத்ரு துடித்தாள்.

அதோடு வைநதேயரின் ஆத்திரம் தீர்ந்தபாடில்லை. மூன்று தடவை பாதாளம் சென்று நாகங்களின் வம்சங்களைக் கூட்டம் கூட்டமாக அழித்தார். நான்காவது முறை அவர் பாதாளம் சென்றபோது ஆதிசேஷன் அவரை வணங்கி "எங்கள் இனத்தவரை இப்படி குலத்தோடு அழிப்பது நியாயமல்ல. தினமும ஒரு பாம்பாக நாங்களே அனுப்புகிறோம்" என்று வேண்டிக் கேட்டுக் கொண்டார். (இந்த வரலாறு நாகாநந்தம் என்ற நாடகநூலில் உள்ளது.)

அருணன் தம்பியிடம் "கருடா! ஒருவர் செய்த குற்றத்துக்கு ஒரு வர்க்கத்தையே அழிப்பது மூர்க்கத்தனம். சூரியனது தேரில் ஒருமாதம் ஒரு உரகம் சாட்டையாயிருக்கும். அதற்கு மேல் அதனால் உஷ்ணத்தைத் தாங்க முடியாது. சித்திரையில் தொடங்கி பங்குனி வரை முறையே வாசுகி, கச்ச வீரன், தக்ஷகன், நாகன், ஏலாபுத்திரன், சங்கபாலன், தனஞ்ஜயன், ஐராவதன், மகாபத்மன், கார்கோடகன், கம்பளன், அஸ்வதரன்" ஆகியோர் சாட்டையாயிருப்பர். அவர்களை உலக நன்மைக்காக விட்டு விடு" இவர்கள் தங்கள் வலிமையால் சூரியத்தேரைச் சுமக்கிறார்கள்.

உன் பிறப்புக்கு சக்தியை அளித்த வாலகில்யர்கள் உனக்கு போஷகர் ஆகின்றனர். அந்த சூரிய பிரகாசிகள் சதா ஆதவனைச் சூழ்ந்து உபாஸனை செய்கின்றனர். அதனால் சூரியனுக்கு தேஜஸ் விருத்தியா கின்றது. அதனால்தான் மழை, பனி வெப்பம் எல்லாம் ஏற்படுகிறது. இயற்கை நியதி கெட என் சகோதரன் காரணமாகலாமா?" என எடுத்துக் கூற அவைகளை விட்டு விட்டார் கருடர்.

சிவபெருமான் பத்மன், சங்கன், குளிகன் இவர்களிடம் கருணை காட்டும்படி கஸ்யபரிடம் கூற, தந்தையின் வாக்குக்கு மதிப்பளித்து அவைகளையும் விட்டு விட்டார் விநதா புத்திரர்.

ஸ்ரீமந் நாராயணன், "அதர்வண வேதத்தில் வரும் 32 வித்யைகளில் உனக்கே முதலிடம் கொடுக்கப்படும். ஆதிசேஷனும், நீயும் என் பாதங்களை ஆளுக்கொருவராகப் பிடித்திருக்க, நீ அப்போது அவனைக் கொன்றால் என் அருளுக்கல்லவோ தோஷம் ஏற்படுமா? பதகேந்த்ரா? உன் மேல் சதாபயணம் செய்து கொண்டேயிருக்க முடியுமா? களைப்பாற நித்திரை செய்யும் படுக்கையான அனந்தனை விட்டு விடு" என்றார். அதனால் ஆதிசேஷன், விடுவிக்கப்பட்டான்.

அவர் கருடனின் இடதுகை கங்கணம். வலது கரத்தில் காற்றையே ஆகாரமாகக் கொண்ட குளிகன் (சனியின் மைந்தன் குளிகன் இவனல்ல) இது ப்ருகந் நாரதீய புராணத்தில் சொல்லப்படுகிறது.

ஹாரமாயிருக்கும் கார்க்கோடகன் தான், நளமகாராஜாவைத் தீண்டிக்கறுப்பாக்கியவன். கருடனின் தாய் அடிமையாகக் காரணமாயிருந்த அவன் வாலைப் பார்க்கக்கூடாது. மீறிக்கண்ணில் பட்டால் கருடனை மறுபடி தரிசிக்க வேண்டும்.

மன்னார்குடியில் நாச்சியார் சன்னதிக்கு எதிரில் விநதை, சுபர்ணீ என்ற நாமத்தோடு தரிசனம் தருகிறார். தாயாரின் மேல் அளவு கடந்த பாசம் வைத்திருக்கும் கருடனின் அருள் இந்த சன்னதியில் வேண்டிக் கொண்டாலே கிடைக்கும்.

பத்மபுராணமும் கருடனின் அருள் எட்டு விதமான சக்திகளைக் கொடுக்கும் என்று புகழ்கிறது.

ஸ்ரீவில்லிப்புத்தூரில், கர்ப்பகிரஹத்தில் வடபத்திரசாயிக்கு சமமாக ஆசனம் தரப்பட்டிருக்கிறது.

நீளமான, வலுவுள்ள வாசுகி தான் திருப்பாற்கடலைக் கடைய உதவியது. அப்பேற்பட்ட வாசுகி கருடனுக்கு பூணூலாகிறார்.

ஆதிசேஷனும், சங்கபாலனும் வெள்ளை; வாஸுகியும், பத்மனும், சிவப்பு; தக்ஷகனும், மஹாபத்மனும் மஞ்சள்; கார்க்கோடகனும், குளிகனும் கறுப்பு; கார்க்கோடகன் புரசபத்ரம் போலிருப்பான்.

# 3. கஜேந்திர மோட்சம்

ஒரு சமயம் சிவபெருமான் சேஷ சாயியைக் காணவந்தார். அவர் தலைமேலிருந்த ஆதிசேஷன் "கருடா, சௌக்கியமா?" என்று கேட்க, அவரவர் இருக்க வேண்டிய இடத்தில் இருந்தால் சௌக்கியம்" என்றாராம் கருடன்.

அந்த ஸ்தலம் மயிலாடுதுறையிலிருந்து கொல்லுமாங்குடி என்ற சிற்றூரில் இறங்கி, அங்கிருந்து இரண்டு கிலோ மீட்டர் தூரத்திலுள்ள "திருச்சிறுப்புலியூர்" என்று சொல்லப்படுகிறது.

கருடனும், ஆதிசேஷனும் தம்மில் யார் பெரியவர் என்று வாக்குவாதம் நடத்தி, இறுதியில் அது யுத்தமாக, எம் பெருமான் சமாதானப்படுத்தி இடம் மாற்றி அதாவது ஆதிசேஷனின் இருப்பிடமான பாதாளத்தில் கருடனையும், வானில் வட்டமிடும் கருடனைப் போல் மிக உயர்ந்த இடத்தில் ஆதிசேஷனையும் (சிறுப்புலியூரில் அடையாளமாக அப்படித்தான் சன்னதி அமைக்கப்பட்டிருக்கிறது) அமர்த்தினார்.

ஸ்ரீவைகுண்டத்தில், ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீஅனந்தனை ஆசனமாகக் கொண்டு அமர்ந்திருக்க, வடகிழக்கில் விஷ்வக்சேனர் ஸ்ரீஸூத்ரவ தீ தேவியுடன், திருக்கரத்தில் தங்கப்பிரம்புடன் காட்சிதர, ஸ்ரீசுபர்ணர், ஸ்ரீ வைகுண்டவாசனுக்கு எதிரில் இரு கட்டை விரல்களும் ஒன்றிய விரல்களைக் கூட்டிய 'முகுளிதபத்ம' ஹஸ்தாஞ்சலியுடன் ஸேவை தருகிறார்.

'ஸ்வாமியின் முகம் பார்க்கும் கண்ணாடி வைநதேயன்' என்று ஸ்ரீநிகமாந்த்த வேதாந்த தேசிகர் போற்றியிருக்கிறார். பரமபதம் போன்றே பூவுலகக் கோயில்களிலும் கருடனை அமைத்திருக்கின்றனர்.

திருப்பாற்கடலில் தோன்றிய, கௌஸ்துபமணி பெருமாளின் மார்பை அலங்கரிக்கிறது. ஆலகால விஷத்தோடு அது தோன்றியதால் விஷமுறிவுக்காக கருடன் அதை நோக்குகின்றாரோ என்று ஸ்ரீதேசிகர் உருகியிருக்கிறார். கருட பார்வைக்கு அத்தனை வீரியம்.

ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியும், இளைய பெருமாளும் இந்திரஜித்தின் நாகாஸ்திரத்தால் கட்டப்பட்டு, மயங்கிக் கிடக்கிறார்கள். ஜாம்பவான், விபீஷணன், சுக்ரீவன், ஹனுமான், அங்கதன், நளன், நீலன், குமுதன், குமுதாட்சன் என்று முக்கியஸ்தர்களெல்லாம், துக்கத்தோடிருக்க,

கருடபகவான் தோன்றி தன் திருக்கைகளால் இருவரையும் தொட, நாகாஸ்திரம் கட்டவிழ்ந்து ஸ்ரீரகுநந்தனனும், லக்ஷ்மணரும், முன்னிலும் தேஜஸோடு எழுந்தனர்' என்கிறார் வால்மீகி.

'சீக்கிரமே பிராட்டியுடன் பட்டாபிஷேகம் நடக்கும்' என்ற சுப வாக்கியமும் சொல்லியிருக்கிறார். இருவரையும் வலம் வந்து வணங்கி வானத்தில் பறந்து சென்றிருக்கிறார்.

இப்படி, எந்த நேரம் பரந்தாமனுக்கு வாகனம் தேவைப்படும் என்று தெரியாதே! அதனால் புறப்படத் தயாராக எதிரிலேயே இருக்கிறார்.

கிருஷ்ணாவதாரத்தில், நரகாசுரனோடு யுத்தத்துக்குக் கிளம்பும் போது கருடனை நினைத்தார். சத்தியபாமாவோடு கருடன் மேலேறி பிராக்–ஜோதிடபுரத்துக்குச் சென்று நரகனை வென்றார்.

ஏனெனில் பிராக்ஜோதிட புரத்தைச் சுற்றி நூறுகாத சுற்றளவுக்கு கூர்மையான சிறுகத்திகள் பரப்பப்பட்டிருந்தன. ஒரு திசையில் நெருப்பு எரிந்து கொண்டிருக்கும் அக்னி துர்க்கம்; ஒரு திசையில் சமுத்திரம் ஜலதுர்க்கமாயிற்று. ஒரு திசையில் கிரி துர்க்கம்; ஆகாயத்தை முட்டும் மலைகள் காவலாயிருந்தது. நான்காவது திக்கில் வாயுதுர்க்கம். நரகனின் ஆணைப்படி வாயு எப்பொழுதும் புயலை வீசிக்கொண்டிருந்தான். அதனால் கண்ணபிரான் ஆகாய மார்க்கமாக வந்து சுதர்ஸனத்தை ஏவினார். சமுத்திரநீர், வாரி இறைக்க, அக்கினி அணைந்தது. மலைகள் பொடிப்பொடியாயின. வாயு தென்றலாய் வீசினான்.

நரகனின் மைந்தன் பகதத்தன் வருணனின் குடையையும், மந்திர பர்வதத்தின் சிகரத்தையும், அதிதி தேவியின் (இந்திரனின் தாய்) அமுதம் ததும்பும் குண்டலங்களையும் ஒப்படைத்து வணங்க, அவனுக்குப் பட்டம் சூட்டி விட்டு அவைகளோடு தேவலோகம் சென்றார் கிருஷ்ணர்.

இத்தனையையும் சுமந்த பெருமை கருடனுக்கு உண்டு. பாரிஜாத விருட்சத்தை, வாசுதேவர் வேரோடு பெயர்த்து, கருடனின் திருத்தோள் மீது வைக்க, இந்திராதி தேவர்கள் அதை தடுத்து சண்டையிட்டனர். வருணன் தன் ஆயுதமான பாசத்தை வீச கருடாழ்வார் தன் கூரிய மூக்கினால் அதைத் துண்டித்தார். கருடனால் சிதைக்கப்பட்ட ஐராவதம் சோர்வுற்று ஓடவும் முடியாததால், இந்திரன் சரணடைந்தான்.

பாரிஜாத மரத்தைச் சுமந்து துவாரகைக்குக் கொண்டு வந்த பெருமையும், கருடனுக்கு உண்டு.

இந்திராஜும்னன் விஷ்ணுபக்தன். தியானத்தில் ஆழ்ந்து விட்டால் அவனுக்கு வெளியுலக உணர்ச்சியே இருப்பதில்லை. துர்வாச முனிவர் எதிரே வந்து நிற்பதை அவன் அறியவில்லை.

மகரிஷியோ கோபக்காரர். அரசன் மமதையால் தன்னை அவமதிப்பதாக எண்ணினார். "கர்வம் கொண்ட மன்னனே! மதம் பிடித்த யானையாகத் திரியக்கடவது" என சபித்து விட்டார்.

துர்வாசர் குரல் கேட்டு கண்விழித்த மன்னன் தன்னை மன்னிக்கும்படி காலைப் பிடித்துக் கெஞ்சினான்.

"வேந்தே! யானையாக இருப்பினும் பெருமாள் மீது நீ கொண்ட பக்தி பேதமுறாது. ஒரு முதலை உன் காலைக்கௌவும் போது நீ 'ஆதிமூலமே' என்றழைப்பாய். அப்போது உனக்கு சாப விமோசனமும், மோட்சமும் கிட்டும்" என்று கூறிச் சென்றார் முனிவர்.

***

கூஹு என்று ஒரு அரக்கன். புஷ்கரணியில் நீராடுவோரின் காலைப்பற்றி இழுத்துச சென்று புசித்து விடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தான். ஒரு நாள் அகஸ்திய முனிவர் அந்தப் பொய்கையில் ஸ்நானம் செய்தார். அவரையும் எல்லோரையும் போல எண்ணி அவர் காலைப் பிடித்து இழுத்தான் கூஹு.

அகஸ்தியர் சினம் கொண்டு நீருக்குள்ளேயே "முதலையாகக் கிட" என சபித்து விட்டார். அரக்கன் தன் செயலுக்கு வருந்தி சாபவிமோசனம் அருளும்படி வேண்டினான்.

"கஜேந்திரன் என்ற யானையின் காலைக்கவ்வும் போது ஸ்ரீமந்நாராயணனின், சக்கராயுதத்தால், சாபவிமோசனமும், முக்தியும் பெறுவாய்" என அருளினார்.

ஸ்ரீஹரிக்கு, சமர்ப்பிக்க, கபிலதீர்த்தத்தில், தாமரைப் பூவைப்பறித்தது கஜேந்திர யானை. இதுதான் சமயம் என்று நீருக்குள்ளிருந்த யானையின் காலைப்பற்றி இழுத்தது கூஹு முதலை. என்ன போராடியும், யானையால் காலை விடுவித்துக் கொள்ள முடியவில்லை.

'ஆதிமூலமே' என்றலறியது. கருடன் மேல் ஆரோகணித்த, பகவான் "விரைந்து செல்க" என்று உத்தரவிட்டார்.

"விழுங்கி முதலையின் பிலம்புரை பேழ்வாய் வெள்ளெயிறுறவதன் விடத்தினுக்கனுங்கி அழுங்கிய ஆனையின் அருந்துயர் கெடுத்த.."



என்று தொண்டரடிப் பொடியாழ்வார், போற்றியபடி முதலை வாயிலிருந்து யானையை விடுவித்து, இரண்டினுக்கும் மோட்சம் கொடுத்தார் லக்ஷ்மீபதி.

இப்படி இரண்டுக்கும் முக்தி கிடைக்க வேகமாய் வந்தவர் கருடன். அந்தத் தடாகத்தில் நீங்களும் நீராட விரும் பினால், தஞ்சாவூ ரிலிருந்து திருவையாறு வழியாக கும்பகோணம் செல்லும் பாதையில் உள்ள கபிஸ்தலத்திற்குப் போக வேண்டும். பங்குனி மாதம் கஜேந்திர மோட்சம் மிகச்சிறப்பாக நடைபெறும். கபிலதீர்த்தம், கஜேந்திர புஷ்கரணி என்று பெயர் மாற்றம் கொண்டிருக்கிறது. வரம் கொடுத்த பெருமாளின் திருநாமம் கஜேந்திர வரதர்.

# 4. வைரமுடி ஸேவை

பிரகலாதனின் குமாரன் விரோசனன்க்ஷீ ராப்திநாதனுக்கு கைங்கரியம் செய்து கொண்டிருந்தான். ஒரு நாள் பரந்தாமனின் வைரமுடியை அபஹரித்துக் கொண்டு பாதாளத்துக்குப் போய் விட்டான். பெருமாள் எதுவும் அறியாதவர் போல், யோக நித்திரையில் ஆழ்ந்திருந்தார். கருடனுடைய பிரபாவம் வெளிப்படவும், விரோசனன் அழியவும் திருவுள்ளம் கொண்டிருந்தார்.

மகரிஷிகள் பெரிய திருவடியிடம் வேண்ட, கருடாழ்வார் விரோசன– னோடு மோதி வைரமுடியை மீட்டு வந்தார். வரும்போது பிருந்தாவனத்தில் கண்ணபிரான் ஒரு மேடையில் அமர்ந்திருக்க அவருக்கு அம்முடியைச் சூட்டி அழகு பார்த்தார். அந்த பிரம்மாண்டமான கிரீடம் குழந்தையின் சிரசுக்கு சரியாகப் பொருந்தியிருந்ததைக் கண்டு ஆச்சரிய முற்றார்.



அதே வைரமுடிதான், மேல் கோட்டை நாராயண புரத்தில் கருட சேவையன்று அணிவிக்கப்படுகிறது. இதுதான் பிரசித்தியாகக் கொண்டாடும் வைரமுடி சேவை.

பாதாளத்தில் ஸ்ரீராமபிரானுக்கும், அரக்கன் மால்யவானுக்கும் நடந்த போரில் கருடன் தனது இருபெரிய இறக்கைகளை வானத்தில் வீசுகிறார். அரக்கர் கூட்டம் பஞ்சு போல் பறக்கிறது. பெருமாளுக்கு வைஜயந்தி என்ற த்வஜக் கொடியாய் இருந்து ஜெயத்தைக் கொடுப்பதால் 'ஜயன்' என்று பட்டப்பெயர் பெறுகிறார்.

ஸ்ரீகருடபகவானின் இறக்கைகளினால் உண்டான காற்று ஸம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்ற ஏழுவகை பிரளய மேகங்களை ஒத்திருந்ததாகச் சொல்லப்படுகிறது. ஸ்ரீனிவாசனாக, கலியுக தெய்வமாக எம்பெருமான் வீற்றிருக்கும் திருமலையில் தங்க கருடன் எடுத்து வந்த மலையே ஏழுமலைகளில் நான்காவது மலையான 'கருடாத்ரி'!

சிசுபாலனோடு போரிடும் போதும் கண்ணனது பாசறையில் பிறந்தது கருடக் கொடிதான்!

## 5. நாச்சியார்கோயில் கல்கருடன்

அந்த சிற்பி ஆகம விதிப்படி சிலை வடிப்பதில் சமர்த்தர். அதனால் அவருக்கு எப்போதும் வேலை இருந்தது. அவர் செதுக்கும் சிலைகள் உயிருள்ளவை போன்றே தோற்றமளிக்கும்.

அவர் கருட சிற்பத்தைச் செதுக்கிக் கொண்டிருந்தார். நுணுக்கமான வேலைப்பாடு. இரண்டு இறக்கைகளையும் வடித்த பிறகு பிராணப்பிரதிஷ்டை (உயிரூட்டுதல்) செய்திருக்கிறார். இவரை தரிசித்தவருக்கு உடனே சுபம் நடக்க வேண்டும்! என்ற ஆசையில்!

அவ்வளவுதான்! சாமவேத த்வனியோடு கருடன் மேல் நோக்கிப் பறக்கத் தொடங்கி விட்டார். சிற்பி வெலவெலத்துப் போய்விட்டார். "இனிமேல் எவர் நம்மை நம்பி வேலை கொடுப்பார்கள்? புதிதாக கருடச்சிலை செய்ய பொருளுக்கு என்ன செய்வது?" என்றெல்லாம் வினாக்கள் நொடியில் மனதில் தோன்றி பயமுறுத்தின.

கையிலிருந்த உளியை பறக்கும் கருடனின் மீது எறிந்தார். படைத்தவன் தந்தைக்கு சமமல்லவா? ஆசாரியை எதுவும் செய்யவில்லை கருடன். மூக்கில் அடிபட்டு பூமியில் இறங்கி விட்டார்.



அவர் இறங்கிய இடம் குடந்தையிலிருந்து திருவாரூர் செல்லும் வழியில் சுமார் நான்கு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள திருநறையூர் என்னும் நாச்சியார் கோவில். இந்தப் பகுதி கிருஷ்ணாரண்யம் என்று வழங்கப்படுகிறது.

சுபர்ணன் இந்த க்ஷேத்திரத்தில் மூலஸ்தானத்துக்கு அருகேயுள்ள மகாமண்டபத்தில் சாளக்கிராம வடிவில் (அதனால் தான் இத்தனை வலிமை) நீள் சிறகும், நீண்டமுடியும், நீண்டு வளர்ந்த திருமேனியுடன், கம்பீரமாக ஒன்பது நாகங்களை ஆபரணமாகப் பூண்டு காட்சியளிக்கிறார்.

இவர் எழுந்தருளியுள்ள இடம் பத்தரை சதுர அடி. வைகுண்ட ஏகாதசி சமயத்திலும், பங்குனி உத்திரத்தேர் திருவிழாவிலும், நான்காம் நாள் கல் கருட சேவை. அத்தனை பெரிய கல் கருடனை நான்கு பேர் சுலபமாய் மூல ஸ்தானத்திலிருந்து தாங்கி வருகின்றனர். ஆனால் வெளியே வந்ததும் கருடனின் எடை அதிகமாக மேலும் நால்வர் தோள் கொடுக்கின்றனர். மீண்டும் எடைகூட பதினாறு பேர் தூக்க வேண்டியதாகிறது. பிரகாரம் சுற்றத்தொடங்குகையில் 32 பேர், அடுத்து 64 நபர்கள் என்று பல பக்தர்கள் பங்கு பெற "நாச்சியார் கோயில் கருட சேவை கண் கொள்ளாக் காட்சியாகும். பெரிய திருவடி தரிசனம்" என்றும் இதனைக் குறிப்பிடுவர்.

உள்ளே குழந்தை மாதிரி இருக்கும் கருடர், வெளிப்படுகையில் விஸ்வரூபம் எடுப்பதாக ஐதீகம். மீண்டும் இருப்பிடம் செல்லும் போது கனம் குறைந்து கொண்டே வந்து நான்கு அன்பர்கள் நிலை நிறுத்துவது அபூர்வமான காட்சி.

இங்கு வ்யூக வாசுதேவருக்கு அமுத கலசம் (மோதகம்) நிவேதனமானதும் கருடருக்கு ஆறு காலம் கொழுக்கட்டை ஆராதனமாகிறது. அதனால் இந்த ஸ்தலத்தில் இவருக்கு மோதக மோதர் என்று பெயர்.

ஆடி ஸ்வாதியன்று விசேஷ ஹோமம், பூஜையெல்லாம் நடைபெறுகிறது. ஸ்ரீனிவாசப் பெருமாளும், தாயாரும் கருடர் சன்னதிக்கு எழுந்தருளுவர். வாமனாவதாரத்தில் கச்யபரின் புத்திரராகத்தானே வாமனர் அவதரித்தார். அந்த முறையில் சகோதரரும் ஆகிறார்.

தை மாத ஸ்வாதியில் வைநதேயருக்கு லக்ஷார்ச்சனை நடக்கிறது. நவ நாகங்களையும் ஆபரணமாகக் கொண்டிருப்பதால் நவக்கிரக தோஷம், நாகதோஷம் நீங்குகிறது என்கிறார்கள்.

இடுப்பிலுள்ள சண்டாயுதம் (லங்கோடு) இடுப்பு சம்பந்தமான பிணிகளைத் தீர்க்கிறது என்பது பக்தர்களின் நம்பிக்கை.

நரசிம்மர் தூணிலிருந்து அவதரித்த நாள் ஸ்வாதி நக்ஷத்திரம். சுபர்ணனது அம்சமாகப் பெரியாழ்வார் பிறந்த தினம் ஸ்வாதி நக்ஷத்திரம். ஸ்வாதியன்று கடல் சிப்பியில் மழைத்துளி விழுந்தால் அது அற்புதமான முத்தாக மாறும்.

* * * * *

ஸ்ரீசுவாமி தேசிகர் காஞ்சிபுரத்திற்குச் சென்றபோது ஒரு அன்பர் "ஸ்வாமி! பங்காளி விரோதத்தில் அடுத்த வாரம் அறுவடை செய்யும்படி விளைந்து நிற்கின்ற கழனியில் குளத்து நீர் முழுமையும் தங்கும்படி மாந்திரீகம் செய்கிறான். காப்பாற்ற வேண்டும். அப்படி நடந்தால் அடுத்த அறுவடை வரை குடும்பம் பூராவும், பட்டினி கிடக்கவேண்டியது தான்" என்று கதறினான்.

கருட நதிக்கரையிலுள்ள, ஔஷதாசல மலையடிவாரத்திலுள்ள திருவஹீந்திரபுரத்தில் ஸ்ரீஅழகிய சிங்கர் சன்னிதிக்கு எதிரேயுள்ள அரசமரத்தடியில், கருட மந்திரத்தை ஜபித்து, கருட பகவானை தரிசித்த பேறு பெற்றவராயிற்றே! ஸ்ரீகருட பஞ்சாசத், ஸ்ரீகருட தண்டகம் இரண்டையும் விடிவதற்குள் எழுதிய மகான். கருணைக்கடல்!



பாய்ந்து வரும் நீருக்கு முன், கால் கட்டைவிரல் நகத்தால், ஒரு கோடு கிழித்தார். தண்ணீர் திரும்பி தடாகத்தைச் சேர்ந்தது. அனைவரும் பிரமித்தனர். மாந்த்ரீகன் ஏராளமான பாம்புகளை ஏவினான். தேசிகர் மறுபடி கோடு கிழிக்க சர்ப்பங்கள், மந்திரவாதியிடமே திரும்பிச் சென்றன.



அடுத்து சங்கன் என்ற கருநாகத்தை ஏவினான் பிடாரன். (இந்த சங்கன் அஷ்டநாகங்களில் ஒன்றல்ல. கர்ணனின் பிள்ளைக்கும் சங்கன் என்று பெயருண்டு. திருவேங்கடமுடையானுக்கு ஆனந்த நிலைய விமான கைங்கர்யம் செய்தவன் பெயரும் சங்கன் தான். ஜனமேஜயனின் மைந்தன் பெயரும் சங்கன்தான். கம்சனின் தம்பி பெயரும் சங்கன்.)

பத்மாசனமிட்டு அமர்ந்த, ஸ்ரீதேசிகர் மகாவிஷ்ணுவை தியானித்து கருட மந்திரம் ஜெபித்தார். சங்கன் அவர் அருகே சீறிக்கொண்டு வந்தது. அப்போது பிரம்மாண்டமான கருடன் தோன்றி சங்கனை கொத்திக்கொண்டு ஆகாயத்தில் பறந்தது. பாம்பாட்டி தன் தோல்வியை ஒப்புக்கொண்டு பிழைப்புக்கு ஆதாரமான சர்ப்பத்தை உயிரோடு மீட்டுத்தரும்படி வேண்டினான்.

கருட தண்டகத்தை, தேசிகஸ்வாமி பாட கருடன் மகிழ்ந்து சங்க பாலனைக் கீழே போட்டார். மந்திரவாதி வணங்கி நன்றி கூறி ஊரை விட்டே ஓடிப்போனான்.

கருட தண்டகத்தின் விளக்கம் முழுவதும் அவர் வரலாற்றில் கூறப்பட்டிருக்கிறது.

* * * * *

தேவர்களும், அசுரர்களுக்கும் கடும்போர். தேவர்கள் பக்கமிருந்து போரிட்டார் ஸ்ரீஹரி. வெற்றி கிட்டியதும் தாகமாயிருக்கிறது' என்றார். ஆதிசேஷனும், கருடனும் தண்ணீர் எடுத்து வர விரைந்தனர். அனந்தன் பூமியை வகிர்ந்து நீர் கொணர்ந்தார். அவர் வகிர்ந்த இடம். வஹீந்திரபுரம் ஆயிற்று. (கடலூரிலிருந்து மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது திருவஹீந்திரபுரம்.) அப்போது பெருகிய தீர்த்தம் சேஷதீர்த்தம் என்றழைக்கப்படுகின்றது. பகவான் தாகம் தீர நீர் அருந்திய தடாகம் இது.

வைகுண்டத்திலுள்ள விரஜா தீர்த்தமே பரந்தாமன் குடிப்பதற்கு ஏற்றதென்று சுபர்ணர் நினைத்து மேலே பறந்தார்.

நாரதர் எதிரே வந்தார். "கருடா! காலத்தை வீணடிக்காதே! அதோபார்! அந்த ரிஷியின் கமண்டலத்தில் இருப்பது விரஜாதீர்த்தம் தான்" என்று பூலோகத்தில் ஒரு இடத்தைச் சுட்டிக் காட்டினார்.

உடனே கருடன் கீழே பாய்ந்தார். கமண்டல நீரை அலகினால் சாய்த்தார். கருட ஸ்பரிசம் பெற்ற ஜலம் நதியாகப் பெருகி ஓடியது. ரிஷிக்கு

மகாகோபம். கஷ்டப்பட்டு வைகுண்டத்திலிருந்து கொண்டு வந்தால் அதைக் கொட்டுவதாவது என்ற எரிச்சல் வந்தாலும் பெரிய திருவடியை சபிக்க முடியுமா?

"இந்த நீர் கலங்கட்டும்" என்று சபித்தார்.

"மகரிஷே! இந்த ஜலம் எம்பெருமான் தாகத்தைத் தணிக்கத்தான் போகிறது. கொண்டு போய் கொடுக்க நேரமாகுமென்றே கவிழ்த்தேன்" என்று விளக்கினார் சுபர்ணன்.

"அடடா! அவசரப்பட்டு விட்டோமே!" என்று வருந்திய முனிவர், "வைனதேயா! பார்வைக்குக் கலங்கியது போல் தெரியுமே தவிர கையில் எடுத்துப பார்த்தால் தெளிவாகத் தெரியும்!" என்று சாப நிவத்தி கூறினார்.

ஆதி சேஷனால் எம் பெருமானின் தாகவிடாய் தீர்ந்ததைக் கண்ட விநதா புத்திரன் "நான் எடுத்து வந்த தீர்த்தத்தையும் ஏற்றருள வேண்டும்" என்று கூறினார்.

"கச்யபக்கொழுந்தே! வருந்தாதே! ரதோற்ஸவத்தன்று இந்த நதிக்கரையில் தான் பூசைகள் நடக்கும். இந்த தீர்த்தம் அன்று எமக்கு உகந்ததாகும். இதில் நீராடுபவர் விஷக்கடி இல்லாமல், திருஷ்டி தோஷம் தாக்காமல், காற்று, கருப்பு அண்டாமல், வாயு சம்பந்தமான நோய்கள் குணமாகி ஆரோக்கியமாக வாழ்வர்" என்று வரமளித்தார்.

கருடன் தட்டிவிட்ட விரஜா நதியின் நீர்தான் கெடில நதியாக ஓடுகிறது. பிரம்மா இந்தக் கதையை தினமும் பாராயணம் செய்வதாக மும்மணிக் கோவையில் ஸ்வாமி தேசிகர் செப்பியுள்ளார். கருட தீர்த்தம் தான் மக்கள் நாவில் மருவி கெடில தீர்த்தமாக மாறியிருக்கிறது.

* * * * *

தை அமாவாசைக்கு மறுநாள் திருநாங்கூர் கருடசேவை திருமணி மாடக் கோவிலின் முன் நடைபெறும். சிவபெருமானின் ருத்ர தாண்டவத்தை நிறுத்த, ஸ்ரீமகாவிஷ்ணு பதினோரு சிவனாகக் காட்சி தந்தார். பின்னர் பதினோரு ருத்ரர்களும் ஒன்றுக்குள் ஒன்றாக அடங்கி ஒன்றாக ஆனார் என்பது ஐதீகம்.

பதினோரு பெருமாளையும், திருமங்கையாழ்வாரை, ஒவ்வொருவராக வலம் வரச் செய்து, அவரவருக்குரிய பாசுரங்களை பாடல் வல்லார், அவர் சார்பில் இசைப்பது , செவிக்கினிய விருந்தாகும்.

நேபாளத்தில் 'கருட நாகப்போர்' என்றொரு திருவிழா. அப்பொழுது அந்த யுத்தத்தில் கருடன் திருவுருவத்தில் வியர்வை வெளிப்படும். அந்த வியர்வையைத் துணியால் ஒற்றி, அதை பட்டர் மன்னருக்கு அனுப்புவார். எவரையாவது நாகம் தீண்டினால், அந்தத் துணியின் நூலிழையை கடிவாயில் சுற்றினால் விஷம் இறங்கி விடும். இந்தப் பண்ணிகை நேபாளத்தில் மிகவும் பிரசித்தம்.

தெலுங்கிலுள்ள யட்சகானம் விநதா புத்திரரின் அருமை பெருமைகளை சிறப்புடன் எடுத்துச் சொல்கிறது.

* * *

திருவனந்தபுரத்தில் ஸ்ரீஇராமானுஜர் வைஷ்ணவத்தை போதிக்கச் செல்கையில் அதை விரும்பாத நம்பூதிரிகள் "எங்கே இவரால் தன் பிழைப்புக்குக் குந்தகம் நேருமோ" என்றஞ்சி, பத்மநாபஸ்வாமியை பிரார்த்திக்க, பெருமாள் எதிரே இருந்த கருடனைப் பார்த்து, "இவரைத் திருக்குறுங்குடியிலே விட்டு விட்டு வாரும்" என்று உத்தரவிட்டார். கருடாழ்வாரும் அப்படியே செய்தார். அதனால்தான் நெல்லை மாவட்டத்திலுள்ள திருக்குறுங்குடியில் (நான்கு நேரியிலிருந்து 25 கி.மீட்டர்) கருடாழ்வார் சன்னதி கிடையாது.

கருடன் தவம் செய்து பரமபதத்தில் வைகுண்ட வாசன் எதிரே இருக்க வரம் பெற்ற இடம் வானமாமலை.

* * *

பாணாசுரன் புதல்வி உஷா. பாணாசுரன் சிறந்த சிவபக்தன். உஷாவின் தோழி, மந்திரி குமாரி சித்ரலேகா. மாய மந்திரங்கள் கற்றவள்.

ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் பேரன், அநிருத்தனை, உஷா காதலித்தாள். சித்திரலேகா துவாரகையிலிருந்து அவனைத் தூக்கி வந்து விட்டாள். இதை அறிந்த பாணன் அநிருத்தனோடு மாயப்போர்புரிந்து நாகாஸ்திரத்தால் அவனைக் கட்டிப் போட்டான்.

நாரதர் அநிருத்தன் நிலையை துவாரகையில் கூற ஸ்ரீகிருஷ்ணர் கருடனை நினைத்தார். கருடன் தோன்றியதும் அவர்மேல் ஏறிக்கொண்டு சைனியத்துடன் சோணிதபுரம் சென்றார். கடும் யுத்தம் நடந்தது. கருடனின்

இறக்கைக் காற்றுப்பட்டவுடன் சர்ப்ப பாசங்கள் நசித்தன. அநிருத்தனையும், உஷையையும் பெரிய திருவடியின் தோளில் ஏற்றி துவாரகை வந்து சேர்ந்தார். இப்படி கருடாழ்வாரின் மகிமைகள் சொல்லிலடங்காதவை.

* * *

கருடாழ்வாருக்கு நரசிம்மாவதாரத்தைக் காண வேண்டுமென்ற ஆசை நாளுக்கு நாள் பெருக (கடப்பாவிலிருந்து 85 கி.மீட்டர் தூரத்தில் உள்ள ஊர் அர்லகட்டா. அங்கிருந்து பேருந்து மூலம் திருச்சிங்கவேள் குன்றம் எனப்படும் அஹோபிலத்தை அடையலாம்.) அஹோபிலத்தில் கடும் தவமியற்றினார். தவத்தை மெச்சிய எம்பெருமான், தூணிலிருந்து வெளிப்பட்டது, இரணியனைப் பிடித்துக் கூர்மையான நகங்களால், குடலை எடுத்து ஆக்ரோஷமாய் கர்ஜித்தது, பிரகலாதனின் பிரார்த்தனைக் கிசைந்து சாந்த நரசிம்மனாக அமர்ந்தது, இப்படி ஒன்பது திருக்கோலங்களைக் காட்டியருளினார். கருடன் தவம் செய்ததால் இந்த மலை கருடாசலம் எனப்படுகிறது.

இதை நவநரசிம்ம க்ஷேத்திரங்கள் என்றும் அழைப்பர். அஹோபில, வராக, பாவந, காரஞ்ச, சக்ரவட, பார்க்கவ, ஜ்வாலா, மாலோலா, யோகானந்த நரசிம்ஹமூர்த்திகள் உள்ளனர். 'அகோ' என்றால் சிம்மம், பிலம் என்றால் குகை. அதுதான் அஹோபிலமாயிற்று. இங்கே மலையடி வாரத்தில் ஒரு கோவிலும், மலைமேல் ஒரு கோவிலும் இருக்கின்றது. மலைக்கோவில் அடிவாரத்திலிருந்து பத்து கி.மீட்டர் தூரமாகும்.

புதுக்கோட்டையிலிருந்து காரைக்குடி செல்லும் வழியில் நடுமையத்தில் அமைந்துள்ள 'திருமெய்யம்' என்ற ஸ்தலத்தில் அமிர்தம் கொண்டு வர மகாபலம் வேண்டி கருடன் தவம் செய்ததாகச் சொல்லப்படுகிறது. ஸத்ய கிரி நாதன் பிரத்யட்சமாகி சக்தி பெருக வரமளித்திருக்கிறார்.

எல்லாப் பெருமாள் கோவிலிலும் கருடன் உண்டு. இதைப் படித்த பிறகு அவரருகே நின்று பிரார்த்தனை செய்யாமல் போக யாருக்கு மனம் வரும்? கருடன் இதைப் படிப்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் எல்லா நலனும் அருள, பிதுர்க்கள் சொர்க்கம் சேர, பாபங்கள் தொலைந்து சம்பத்து பெருக பெருமாளிடம் விண்ணப்பிப்பார் என்பது சத்திய வாசகம்.

# ஸ்லோகங்கள்

## யமபயத்தை நீக்கும் ஸ்லோகம்

அதிபீஷண கடுபாஷண யமகிங்கர படலீ
க்ருத தாடன பரிபீடன மரணாகம ஸமயே !
உமயா ஸஹ மம சேதஸி யம ஸாஸன நிவஸன்
சிவசங்கர சிவசங்கர ஹரமே ஹர துரிதம்||

பொருள்: யமனை அடக்கியவரே! மிகுந்த பயத்தைத் தருகின்றவர்களும், கொடூரமான சொற்களைச் சொல்கின்றவர்களுமான யமகிங்கரர்களின் கூட்டம் அடித்து த்துன்புறுத்தும் மரணத் தறுவாயில் அப்பாதையுடன் சேர்ந்து என் நெஞ்சில் வாசம் செய்து சிவசங்கரா! சிவசங்கரா! எனது பாபத்தைப் போக்க வேண்டும்.

## கருட ஸ்துதி

குங்குமாங்கித தேஹாயகுந்தேந்து தவளாய ச |
விஷ்ணு வாஹ நமஸ்துப்யம் பக்ஷிராஜாய தேநம: ||

பொருள் : குங்குமம் போன்ற செந்நிறம் வாய்ந்த சரீரமும், மல்லிகை, சந்திரன் இவை போன்ற வெண்ணிறமான கழுத்தும் கொண்ட மஹாவிஷ்ணுவின் வாகனமான, ஹே பக்ஷிராஜனே! உனக்கு நமஸ்காரம்.

– என்று கருடாழ்வாரின் முன் நின்று சொல்லிவிட்டு பெருமாளை தரிசிக்கச் சென்றால் நினைத்த காரியம் விரைந்து நடக்கும்.

## சாவித்திரி யமனை தரிசித்ததும் ஸ்துதித்த, யமாஷ்டகம்!

1. சூரியன் தவம் செய்து தர்மத்தை ஆராதனை செய்து உம்மைப் பெற்றதால் தர்மராஜன் என்று பெயர் பெற்றவரே! உமக்கு நமஸ்காரம்.

2. சகலமானவற்றிற்கும் சாட்சியாக விளங்கும் உங்களுக்கு சர்வ ஜீவன்களிடமும் சமத்துவம் இருப்பதால் சமன் என்று பெயர் பெற்றவரே! உமக்கு நமஸ்காரம்.

3. பிரபஞ்சத்தில் எல்லா உடல்களுக்கும், இறுதியழிவு உண்டாக்குவதால் யமன் என்று பெயர் பெற்றவரே! உமக்கு நமஸ்காரம்.

4. காலத்துக்கு ஏற்றவாறு, எல்லா பிராணிகளையும், நீங்கள் நாசம் செய்வதால், கிருதாந்தகன் என்று பெயர் பெற்றவரே! உங்களை வணங்குகின்றேன்.

5. பாபிகளைத் தூய்மையாக்க, தண்டாயுதத்தை தரித்துள்ளதால், 'தண்டதரன்' என்று பெயர் பெற்றவரே! உங்களை தண்டனிடுகிறேன்.

6. தபஸ்வியாகவும், பிரம்மநிஷ்டராகவும், ஜிதேந்திரியராகவும், ஜீவன்களுக்கு கர்ம பலத்தைக் கொடுப்பவராகவும் இருப்பதால் 'கூற்றுவன்' என்ற பெயர் பெற்ற உங்களை வணங்குகின்றேன்.

7. அனைத்தும் உணர்ந்த சர்வக்ஞராகவும், பாவிகளுக்குத் துயரத்தை வழங்குபவராவும், புண்ணியாத்மாக்களுக்கு சினேகிதராகவும் இருப்பதால் 'புண்ய மித்ரன்' என்று பெயர் பெற்ற உங்களுக்கு நமஸ்காரம்.

8. பிரம்ம அம்சம், பிரம்ம தேஜஸ் முதலானவற்றால் பிரகாசித்து பிரம்மத்தையே தியானிப்பதால் 'காலன்' என்று பெயர் பெற்றவரே! உங்களுக்கு நமஸ்காரம்.

### பலஸ்ருதி (ஸ்தோத்திர பலன்)

இந்த யமாஷ்டகத்தை அதிகாலையில் வாசிப்போருக்கு யமபயம் நீங்கிவிடும். அதோடு சகல பாபங்களும் (முற்பிறவியில் செய்த) நசித்து விடும். மகாபாபி கூட இதைப்படித்தால் அவன் பாபத்தில் அனுபவிக்க வேண்டிய தண்டனைகளை யமன் விதிக்க மாட்டார்.

### சௌந்தர்யலஹரி – 20

கிரந்தி – மங்கேப்ய: கிரண–நிகுரும்பாம்ருத ரஸம்
ஹ்ருதி த்வா மாதத்தே ஹிமகர – சிலாமூர்த்தி மிவய: |
ஸ ஸர்ப்பாணாம் தர்ப்பம் சமயதி சகுந்தாதிப இவ
ஜ்வர ப்லுஷ்டான் த்ருஷ்ட்யா ஸுகயதி ஸுதா தார ஸிரயா ||

பொருள்: எல்லா உறுப்புகளிலிருந்தும் கதிர்களாக அமிர்தரஸத்தைப் பெருக்கும் உன்னை எவர் நெஞ்சில் நிலைநிறுத்தித் தியானம் செய்கின்றாரோ அவர் பக்ஷிராஜனான, கருடனைப்போல், பாம்புகளின் திமிரை அடக்குகிறார். அமிர்த நாடியோடு கூடியிருக்கும் பார்வையால் விஷஜுரத்தால் அவதிப்படுகின்றவர்களை சுகமடையச் செய்கிறார்.

(இந்த ஸ்தோத்திரத்தை எப்பேற்பட்ட காய்ச்சலானாலும் நோயாளி அருகிலிருந்து பாராயணம் செய்தால் குணமாகிவிடும் என்கிறார் கைலாஸபதி).

**கருடோபநிஷத்:**

(1) சந்த்ரமண்டல
(2) ஸங்காச, ஸுர்ய மண்டல முஷ்டிக,
(3) ப்ருதிவீமண்டல முத்ராங்க,
(4) ஸ்ரீமஹா கருடாய விஷம் ஹர ஹர ஹும் பட் ஸ்வாஹா!
(5) ஓம் க்ஷிப் ஸ்வாஹா!
(6) ஓமீம் ஸ சரதி, ஸ சரதி, தத்காரீ மத்காரீ
விஷாணாஞ்ச விஷ ரூபிணீ, விஷ தூஷிணீ।
விஷ சோஷணீ । விஷ நாசினீ, விஷ ஹாரிணீ।
ஹதம் விஷம் நஷ்டம் விஷம் அந்த: ப்ரலீனம் விஷம் ப்ரநஷ்டம் ।
விஷம் ஹதம் தே ப்ரம்ஹணா விஷம் ஹதம் ஹதம்
இந்த்ரஸ்ய வஜ்ரேண ஸ்வாஹா ॥

ஷண்மாஸ – த்யான யோகேன ஜாயதே கருடோபம ।
த்ருஷ்ட்யா கர்ஷயதே லோகம் த்ருஷ்ட்யைவ குருதே வசம் ॥

பொருள்: மேற்கண்ட ஸ்லோகத்தை ஆறுமாதங்கள் தொடர்ந்து தியானம் செய்பவர் கருடாழ்வாருக்கு சமமான பார்வையைப் பெற்று உலகை வசப்படுத்துவார்.

சந்திர காந்த – சிலா மூர்த்திம் சிந்தயித்வா விநாசயேத்।
தாபஜ்வரான் அசேஷாம்ச்ச சீக்ரம் தார்க்ஷ்ய இவாபர:॥
கருடத்யான – யோகேன – ஸ்மரணாத் – நாசயேத் விஷம் ।

பொருள் : சந்திரகாந்த பதுமை போன்ற அம்பிகையின் தியானத்தால் எல்லா ஜ்வரங்களையும், விஷங்களையும் விரைந்து போக்கடிப்பவர் ஆகிறார்.

இப்படி கருடனின் பெருமையை உமாதேவியாரோடு ஒப்பிட்டு சிலாகித்துச் சொல்கிறது செளந்தர்யலஹரி.

சுபம்.

